2 திருவாவடு

வெளியீடு எண் 635.

9—1

உ

குருபாதம்

# குரு வழிபாடு







தருமையாதீனம்

1972

உ

குருபாதம்

## பன்னிரு திருமுறை ஆசிரியர்கள்

1 திருஞானசம்பந்தர் 2 வாகீசர் 3 சுந்தரர்
4 திருவாத வூரர் மற்றைத்
5 திருமாளிகைத் தேவர் 6 சேந்தனர் 7 கருவூரர்
தெள்ளு 8 பூந் துருத்தி நம்பி
வருஞான 9 கண்டரா தித்தர் 10 வேணாட்டடிகள்
வாய்ந்த 11 திரு வாலி யமுதர்
மருவு 12 புருடோத்தமர் 13 சேதிராயர் 14 மூலர்
மன்னு திரு ஆலவாயார்
ஒரு16 காரைக் காலம்மை 17 ஐயடிகள் 18 சேரமான்
ஒளிர் 19 கீரர் 20 கல்லாடனர் [மானே(டு)
ஒண் 21 கபிலர் 22 பரணர் மெய்உண 23 ரிளம் பெரு
ஓங்கும் 24 அதிராவடிகளார்
திருமேவு 25 பட்டினத்தடிகளொடு
26 நம்பியாண்டார் நம்பி 27 சேக்கிழாரும்
சிவநெறித் திருமுறைகள் பன்னிரண் டருள்செய்த
தெய்விகத் தன்மையோரே.

640



திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீன முதற்குரவர்
ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

வெளியீடு எண். 635.

உ

குருபாதம்

# குரு வழிபாடு

இது

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

இருபத்தாறுவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

திருவுளப் பாங்கின்வண்ணம்

வெளியிடப்பெற்றது.




தருமையாதீனம்

1972

# முன்னுரை

---

இறைவன் உயிர்கட்குக் கண்முன் தோன்றி அருளுந் தற்குக் கொள்ளும் வடிவம், 'குரு, லிங்கம், சங்கமம்' என்னும் மூன்றுமாம். அவற்றுள் முன் நிற்பது குரு வடிவம். இறைவனால் உயிர்கள் அடையும் பயன்களில் சிறப்புடையது ஞானமே. இது சிறப்பாகக் குருவடிவினாலே கிடைப்ப தாகும். ஆதலால், ஞானிகள்பால் குருபத்தி சிறந்து காணப்படுகின்றது. 'நாயன்மார் அறுபத்துமூவருள் பதினொருவர் குருவருளால் முத்தியடைந்தவர்' என்று குறிக்கின்றார் உமாபதி சிவாசாரியார்.

"திருஞான சம்பந்தர், திருநாவுக் கரையர்,
திருமூலர், நெடுமாறர், மங்கையர்க் கரசி,
கரைசேரும் குலச்சிறையார், யாழ்ப்பாணர், குறும்பர்,
கணநாதர், அப்பூதி, சோமாசி மாறர்
உரைசேரும் இவர்கள்பதி னொருவர் குருவருளால்
உயர்முத்தி அடைந்தவர்கள்."

(சேக்கிழார் புராணம்)

'குரு' என்பதற்கு அஞ்ஞானத்தைப்போக்கி மெய்ஞ் ஞானத்தைத் தருபவர் என்பதே பொருள். 'ஆசிரியர்' என்பதிலும், ஆசு - குற்றத்தை, இரிப்பவர் - நீக்குபவர்

என்னும் பொருள் அமைகின்றது. குரு, ஞான ஒளியாக-ஞானக்கினியாக விளங்குபவர்.

" அழலின் நீங்கான் அணுகான் அஞ்சி " என்னும் நன்னூல் சூத்திரமும் ஆசிரியரை அனலாகக் கூறக் காண்கின்றோம். ஆகவே, அனலை அடைந்த பொன் மாசு நீங்கி ஒளி வீசுதல்போல, ஆசாரியரை அடையும் மாணாக்கர், அஞ்ஞானம் நீங்கி மெய்ஞ்ஞான ஒளி மிகப் பெறுபவராவர். குருபத்திக்குக் கருவூலங்களாய் விளங்குவன ஞானபீடங்களாய் உள்ள ஆதீனங்கள். எனவே, இத்தகைய ஆதீனங்களை அடைந்து குருபத்தியின் வழியே ஞானத்தைப் பெறுதல் ஒவ்வொருவருக்கும் இன்றியமையாதது.

மாயூரத்திற்குக் கிழக்கில் காவிரியின் தென்கரையில் விளங்கி, பதினாறும் நூற்றாண்டு முதலாக ( கி. பி. 1560 ) ஞான ஒளியைப் பரப்பிவருவது தருமையாதீனம். இவ்வாதீனத்தில் சிறப்பாகத் தொடர்பு கொண்டு குருபத்தி பூண்டு நிற்பவர்கள் மாயூரம் வட்டாரப் பெருமக்கள். இவர்கள், இதுபொழுது இவ்வாதீனத்தில் இருபத்தாறுவது குருமகாசந்நிதானமாக அருளாட்சி ஏற்று விளங்கும் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளைத் தங்கள் நகரத்திற்கு எழுந்தருளிவந்து அருள் வழங்குமாறு விண்ணப்பித்து, மிகச் சிறப்பாக வரவேற்பு விழா நிகழ்த்தி மகிழ்கின்றார்கள். ஆதீனத்திலும் ஆன்மார்த்த மூர்த்தி ஸ்ரீ சொக்கநாதப் பெருமானுக்கும், ஆதி பரமாசாரியரது ஞானபுரீசர் திருக்கோயில் தருமபுரீசுரர் திருக்கோயில் களிலும் சிறந்த அபிஷேக ஆராதனைகளும், ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானத்தை ஞானபீடத்தில் கண்டு முறைப்படியான

குருவழிபாடும், மற்றும் மாகேசுர பூஜையும் நிகழ்வித்தல் அனைவரையும் குருவருளுக்கும், திருவருளுக்கும் பாத்திரராகச் செய்யும் அரிய பணியாகத் திகழ்கின்றது.

இத்தகைய நல்ல நிகழ்ச்சியில் குருபத்தி சிவபத்தியில் அனைவரும் சிறந்து விளங்குதற்கு வாய்ப்பாகச் சைவத்தின் சிறப்பு, சைவ சமய ஆசாரியர்களின் பெருமை இவைகள் விளங்கத் தக்க ஒரு நூல் வெளிவர ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தில் திருவுளம் பற்றிய வண்ணம், "குரு வழிபாடு" என்னும் இந்நூல் வெளிவருகின்றது.

இதில் சைவ சமயச் சிறப்பு, சமயாசாரிய சந்தானாசாரியர்களது வரலாறு, திருமுறை விளக்கம், சேக்கிழார் வரலாறு, மெய்கண்ட சாத்திரக் குறிப்பு, தருமையாதீன ஆதிபரமாசாரியர் ஸ்ரீ குருஞானசம்பந்தரது அருள் வரலாறு, ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானங்களின் அருள் வரலாறு ஆகியவை தரப்பட்டுள்ளன.

இதனை அன்பர்கள் பலரும் பெற்றுக் கற்றுப் பயன் அடையவும், இவ் வெளியீட்டிற்குச் சிறந்தகாரணமாய் விளங்கும் மாயூரம் வட்டாரப் பெருமக்கள் பல நலங்களும் பெற்று [வாழவும் செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைப் பிரார்த்திக்கின்றேன்.

இங்ஙனம்,

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின்
அருளாணைப்படி,

ஒடுக்கம்

தருமபுரம், 1—2—1972 } **வித்துவான். இராமலிங்கத் தம்பிரான்.**

உ

குருபாதம்

# ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்தர்

# தோத்திரம்

சீரணியும் நுதலின்விழி மழுமான் நாகம்
திருந்தும்எரி பொருந்துவிடம் தெரிந்தி டாமல்
தாரணிஅன் பரையாள அவர்போல் வந்த
சைவசிகா மணிஎவர்க்கும் தலைவன் எங்கோன்
காரணியும் நெடியபொழிற் கமலை வேந்தன்
கருணைமழை பொழியும்இரு கடைக்க ணாளன்
பாரணியும் ஞானசம் பந்தன் எந்தை
பரமன்இரு சரணமலர் பரவி வாழ்வாம்.

— ஸ்ரீ சம்பந்தசரணாலயர்.



தருமையாதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

# குரு வழிபாடு

## சைவ சமயம்

### உணர்வும் ஒழுக்கமும் :

"சைவ சமயமே சமயம்", 1 "சைவத்தின்மேல் சமயம் வேறிலை" 2 என்பன ஆன்ரேர் வாக்குக்கள். இத்தகைய சிறப்புடைய சைவ சமயமே நமது சமயம்.

"வாழ்வெனும் மையல் விட்டு
வறுமையாம் சிறுமை தப்பித்
தாழ்வெனும் தன்மை யோடும்
சைவமாம் சமயம் சாரும்
ஊழ்பெறல் அரிது." 3

என்பதனுல், இயற்கையிலே சைவர்களாய்ப் பிறந்துள்ள நாம் அத்தகைய புண்ணியப்பேறுடையவர்களே. ஆயினும், 'சைவம் என்பது யாது, சைவத்தின் ஆசிரியர்கள் யாவர், அவர்கள் நமது சமயத்தை எவ்வாறு நமக்குப் பாதுகாத்துத் தந்தார்கள், நமக்கு அவர்கள் அருளிச் சென்ற உபதேசங்கள் யாவை' என்பவற்றை நாம் அறிந்துகொள்ளாமலும், அறிந்து அந்த வழியில் நில்லா

1 தாயுமானவர். 2 சைவ எல்லப்ப நாவலர்
3 சிவஞான சித்தியார்.

மலும் இருப்போமாயின், பிறப்பிலே நாம் சைவர்களாய்ப் பிறந்தும் பயன் என்ன! கைக்கு எட்டியது வாய்க்கு எட்டாதுபோனது போலவும், வெள்ளத்துள் நாவற்றிக் கிடப்பது போலவும், செல்வத்தைப் பெற்றிருந்தும் அதனை அனுபவிக்கத் தெரியாதது போலவும் அன்றோ ஆகிவிடும்! இதனை நாம் சிறிதளவேனும் சிந்திக்க வேண்டாவோ!

## சைவத்தின் சிறப்பு - தொன்மை :

உலகில் பல சமயங்கள் உள்ளன. எனினும், அவையெல்லாம் ஒவ்வொரு காலத்தில் தோன்றிய கால வரையறையை உடையன. நமது சைவ சமயம், தோற்றம் அறியப்படாத பழமை யுடையது. பிற பிற சமயங்கள் ஒவ்வொரு கால எல்லையை யுடைய ஒவ்வோர் ஆசிரியரால் தோற்றுவிக்கப்பட்டமையால், அவற்றின் கால எல்லைகள் அறியப்படுகின்றன. சைவ சமயம் காலத்தைக் கடந்த இறைவனாலே அளிக்கப்பட்டமையால், இது, கால எல்லை அறியப்படாததாகின்றது.

## பொது நோக்கு :

இந்திய நாட்டில் 'ஆறு சமயங்கள்' (ஷண்மதம்) எனப்பட்ட அகச் சமயங்கள் யாவும் முற்காலத்தில் சைவ சமயத்தின் ஒவ்வொரு பகுதியாகவே இருந்தன. பிற்காலத்தில் சிலரால் அவை வேறு வேறு தனி மதங்களாக்கப் பட்டன. அதனால், சைவர்கட்கு எக்காலத்திலும் அச் சமயங்கள்பால் வேற்றுமை உணர்வு இல்லை; பொது நோக்கே உள்ளது. இதற்குச் சிவாலயங்களில் உள்ள மூர்த்திகளே போதிய சான்று.

"விரிவிலா அறிவினார்கள் வேறொரு சமயம் செய்தே
எரிவினால் சொன்னாரேனும் எம்பிராற் கேற்ற தாகும்"

என்னும் அப்பரடிகளின் வாக்கு ஒன்றே சைவ சமயத்தின் பொது நோக்கினை இனிது விளக்கிநிற்கும். 'உலகில் உள்ள மக்களின் தரம் பல்வேறாய் இருத்தலால், அவற்றிற்கு ஏற்பப் பல்வேறு சமயங்களும் வேண்டப்படுவனவே' என்பதுதான் சைவ சமயத்தின் உட்கருத்து.

உலகியலுக்கு ஒத்தல்:

சிற்சில மதங்கள். உலகத்தைத் தமக்குப் பகைப் பொருளாகக் கருதி, உலகியலை அடியோடு வெறுத்து ஒதுக்குவனவாய் உள்ளன. சைவ சமயம் அவ்வாறின்றி, 'உலகம் உயிர்களது நன்மையின் பொருட்டு இறைவனால் தரப்பட்டது;' அதனால், உலகியல் முறை உயிர்களின் பக்குவ முதிர்ச்சிக்கு அமைந்த ஒரு சாதனம்' என்னும் கருத்துடையது அதனால், சைவ சமய நடைமுறைகள் யாவும் உலகியலுக்கு ஒத்த வகையிலே அமைந்திருத்தல் காணலாம். சைவ சமய ஆசாரங்கள் உடல் நலத்திற்கு ஏற்ற வகையிலே அமைந்திருத்தல், சைவத்தின் தத்துவக் கொள்கைகள் இன்றைய அறிவியல் அறிஞர்களாலும் ஏற்கத் தக்கனவாயிருத்தல் முதலியவற்றையும் நாம் இங்கு நினைவு கூர்தல் தக்கது.

பரந்த நோக்கம்:

உலகியல் வகையில் எவ்வாறாயினும், சைவ சயயம் சமயத் துறையில் மக்களிடையே சாதி, குலம், பிறப்பு முதலிய வேறுபாடுகளைக் கொள்வதில்லை. இதற்குச் சைவ சமய அடியார்களாகிய அறுபான்மும்மை நாயன்மார்களே சிறந்த எடுத்துக்காட்டாவார்கள். அறுபான்மும்மை நாயன்மார்களில் அந்தணர் உண்டு; பேரரசர் உண்டு; சிற்றரசர் உண்டு: வணிகர், வேளாளர், தொழிலாளர், மீனவர், தாழ்த்தப்பட்டோர் முதலிய பலரும் உளர்.

இன்னும் இல்லறத்தாரும் உளர்; துறவிகளும் உளர். உலகியலில் இங்ஙனம் பல்வேறு வகையினராகக் காணப் படும் இவர்கள் அனைவரும் சமய நெறியில் ஒரு தன்மை யராகவே சைவ சமயத்தில் காட்சியளிக்கின்றார்கள். இவர்கள் யாவரும் பெற்ற பேறு ஒன்றே என்பதும் சைவ சமயத்தின் கொள்கை,

" எந்நிலையில் நின்றாலும் எக்கோலம் கொண்டாலும்
மன்னியசீர்ச் சங்கரன்தாள் மறவாமை பொருள். " *

என்பது சைவ சமயத்தின் அருள் மொழி. சிறந்த தத்துவக் கொள்கை, சிறந்த ஒழுக்கம் – என்பவைகளை உடையதாய், அதே சமையத்தில் இவ்வளவு பரந்த நோக்கத்தைக் கொண்டதாய் உள்ள ஒரு மதம் – சமயம் கிடைத்தல் அரிது. இதனைப் புண்ணிய வசத்தினாலே பெற்றுள்ள நாம், இந்த அரிய வாய்ப்பினை நன்கு பயன் படுத்திக்கொள்ளத் தவறுதல் கூடாது.

## நம் ஆசிரியர்கள் :

கால எல்லை அறியப்படாத பழமை உடையதாய், அதே சமையத்தில் பலவகைச் சிறப்புக்களையும் பெற்றுள்ளதாகிய நம் சைவ சமயத்திற்கு முதல் ஆசிரியன் சிவபெருமானே. அவன் 'வேதம், சிவாகமம்' என்னும் இருவகை நூல்களா லும் இச்சமயத்தைத் தொன்மைக் காலத்தில் பொதுவாகவும், சிறப்பாகவும் உலகிற்கு உணர்த்தியருளினான். ஆயினும், அதனை உணரமாட்டாத மக்களால் இடைக்காலத்திலே பல குழப்பங்கள் தோன்றலாயின. அக்காலத்தில் இறை வனது திருவருட் குறிப்பின்படி தமிழ்நாட்டிலே தோன்றி விளக்கம் கண்டவர்கள் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர்,

* பெரிய புராணம் – சாக்கிய நாயனார்.

சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய சமயாசாரியர் நால்வர்களும், மெய்கண்டார், அருணந்திதேவர், மறைஞானசம்பந்தர், உமாபதி சிவாசாரியர் என்னும் சந்தானசாரியர் நால்வர்களும் ஆவர். அவர்களில் சமயாசாரியர்கள் தோன்றிய காலம், வேற்றுச் சமய மன்னர்களது ஆட்சியின் செல்வாக்கினால் சைவ சமய ஒழுக்கமே புறக்கணிக்கப்பட்டுச் சமயம் ஒளிகுன்றியிருந்தது. அப்பொழுது திருவவதாரம் செய்து, நடைப் பயணத்திற்கும் செம்மையான வழியில்லாமல், காடு, செடி, மலை, கல், முள், பள்ளம், மேடு, ஆறு, மடு, ஓடைகள் முதலிய இடையூறுகள் நிறைந்த அக்காலத்தில் ஆயிரக் கணக்கான அடியார் திருக்கூட்டத்துடன் வெய்யில், பனி, மழை, பசி, தாகம், பஞ்சம் முதலியவற்றுள் எதனையும் பொருட்படுத்தாமல் தமிழ்நாடு முழுவதும் – சிறு மூலை முடுக்குக்களிலுங்கூட – யாத்திரை செய்து அரிய இனிய இசைப் பாடல்களாலும் பல அற்புதச் செயல்களாலும் சைவ சமயத்தின் உண்மையை விளங்கச்செய்து, புறச்சமயத்தைக் கைக்கொண்டிருந்த மன்னர்களும் உண்மையை உணர்ந்து, தாங்களாகவே சைவர்களாகும் சிறப்பினை உண்டாக்கிச் சைவ சமயத்தை நிலைபெறச் செய்தவர்கள், சமயாசாரியர் நால்வரில் முதல் இருவராகிய ஞானசம்பந்தரும் நாவுக்கரசரும் (அப்பரும்) ஆவர். அவர்களுள் நாவுக்கரசர் தமிழ் நாட்டின் வடபகுதியில் மகேந்திரவர்ம பல்லவனைச் சைவனாக்கியும், ஞானசம்பந்தர் தமிழ்நாட்டின் தென்பகுதியில் பாண்டியனைச் சைவனாக்கியும் சைவ சமயத்தை நிலைநிறுத்தினார்கள்.

இவ்விருவர்கட்கு ஏறக்குறைய ஒரு நூற்றாண்டிற்குப் பின் சுந்தரர் திருநாவலூரில் திருவவதாரம் செய்து, திருவாரூரில் எழுந்தருளியிருந்து, முன்னை ஆசிரியர் இருவரும் செய்தருளியவாறே தாமும் தமிழ்நாடு முழுவதும் யாத்திரை செய்து, இசைத்தமிழ்ப் பாடல்களையும் ஆங்காங்கு

அருளிச்செய்தார். சேர நாட்டு அரசராகிய சேரமான் பெருமாள் இவருக்கு உற்ற தோழராகியதும், அவரது விருப்பப்படியே சேர நாட்டிற்கு இவர் எழுந்தருளி அங்கு யாத்திரை செய்து திருப்பாடல்கள் பாடியதும் இவர்பால் சிறப்பாகக் காணப்படுவன ; முன்னை இருவரும் தமிழ் நாட்டின் வடக்கிலும், தெற்கிலும் மட்டுமே யாத்திரை செய்தார்கள், இவர் மேற்கிலும் யாத்திரை செய்தார்.

மற்றும் சிறப்பிற் சிறப்பாக இவர் செய்தருளியது திருத்தொண்டத் தொகைத் திருப்பதிகத்தாலும், பிறவற்றாலும் சைவ சமய நெறியில் நின்று சிறப்புற்ற அடியார்களின் பெருமை, ஞானசம்பந்தர், நாவுக்கரசர் என்னும் ஆசாரியர்களின் பெருமை இவைகளை விளக்கும் முகத்தால், அடியார்க்கு அடியராவதே, ஆண்டவனுக்கு அடியராவதாகும் என்னும் பேருண்மையை விளக்கியதாம். ஒரு சமயம் சிறப்புற்று விளங்குவது, அதில் நின்று பயன் பெற்ற அடியார்களாலேயாம். அதனால், நாயன்மார்களது பெருமை மக்களுக்கு இனிது விளங்கினமையால் சைவ சமயம் தழைத்தோங்குவதாயிற்று. எனவே, சம்பந்தரும், அப்பரும் நிலத்தைக் காடு திருத்தி உழுது சிறந்த சில வித்துக்களை இட்டுச் சென்றார்கள் என்றும், சுந்தரர் அந்நிலத்தில் நல்ல உரங்களை இட்டு நீர் பாய்ச்சிப் பயிரைச் செழிப்புற வளர்த்ததோடு, மற்றும் கனிவகை முதலியவைகளையும் தருமாறு செழிக்கச் செய்தார் என்றும் கூறலாம்.

மூவரது திருப்பாடல்கள் இசைத்தமிழாய் நின்று பக்திச் சுவையோடு, கலையுணர்வையும் வளர்த்தன. அவை பக்திச் சுவை ஒன்றையே பெருக்கிக் கருங்கல் மனமும் கரைந்து உருகுமாறு செய்யும் திருவாசகத்தோடு இணைந்தபொழுது, சைவசமயம் ஈடும், எடுப்பும் இல்லாத பெருமையை யுடையதாய் இன்றும் நின்று நிலவுவதாயிற்று.

இவ்வாற்ருல் நால்வர் பெருமக்கள் இல்லையென்ருல் நம் சைவ சமயம் எங்கே இருக்கும்! இன்று நாம் பெருமை பேசிக்கொள்வதற்குக் காரணமாய் உள்ள திருக்கோயில்கள் எங்கே யிருக்கும்! இந்த அருமையை உணர்ந்த ஒரு பெரியார் உணர்ச்சி மேலீட்டால் பாடிய வெண்பா நம் அனைவராலும் பலகால் படித்து உணரத்தக்கது.

"சொற்கோவும், தோணிபுரத் தோன்றலும், எம்சுந்தரனும்
சிற்கோல வாதவூர்த் தேசிகனும் - முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே மாமறைநூல் தானெங்கே
எந்தைபிரான் அஞ்செழுத்தெங் கே."

இவ்வாற்ருல் சமயாசாரியர் நால்வர்களது வரலாற்றைச் சுருக்கமாகவேனும் சைவர் ஒவ்வொருவரும் அறிந்திருத்தலும், அவர்களை வழிபடுதலும், அவர்தம் அருள்மொழிகளை அன்புடன் ஓதி உணர்தலும் இன்றியமையாதன.

"பொன்னுற் பிரயோசனம் பொன்படைத்தாற்
குண்டு; பொன்படைத்தோன்
தன்னுற் பிரயோசனம் பொன்னுக்கங்கு
ஏதுண்டு?"

என்பதுபோல, ஆசாரியர்களை வழிபடுவதால் வழிபடுபவர்கட்குப் பயனேயன்றி அவர்கட்கு வருவது ஒன்றில்லை.

## சமயாசாரியர் சிறப்பு

சமயாசாரியர் நால்வருள் ஞானசம்பந்தருக்கு இறைவன் ஆசிரியத் தலைமையைத் தந்தருளினுன். அஃது அவரது உணர்வில் உலகியல் சிறிதும் பற்றுதவாறு, ஈராண்டு நிரம்பி, மூன்ருவது ஆண்டு தொடங்கும் பொழுதே இறைவன் அவர்முன் தோன்றி அம்பிகையின்

அருட்பாலே அளித்து, உவமையிலாக் கலேஞானம், உணர் வரிய மெய்ஞ்ஞானம் இரண்டனையும் தந்து, தாவில் தனிச் சிவஞான சம்பந்தராகச் செய்து, அருட்பாடல்கள் பல வற்றையும் அருளிச்செய்யுமாறு செய்தமையாலும், பின்னும் அவர் ஏறுதற்கு முத்துச்சிவிகை, ஊதுதற்கு முத்துச் சின்னம், பிடிப்பதற்கு முத்துக்குடை, முத்துப்பந்தல் இவை களை இறைவன் தானே வழங்கிச் சிறப்புச் செய்தமையாலும் நன்கு உணரப்படும். அதனுல், அவ்வருட் குறிப்பின்படியே அவர் அத்தலைமையையேற்று ஆணைமொழி கூறி, அரு ளாட்சி செலுத்திவந்தார்.

அப்பர் பெருமான், ஆசிரியர்களது அருள்மொழிகளைச் சொல்லளவில் உணர்தல்மட்டும் போதாது, செய்கையில் பல தொண்டுகளைச் செய்வதே பயன்பெறும் வழியாகும் என்பதைப் பல திருப்பாடல்கள் வாயிலாக வற்புறுத்தி வந்ததேயன்றித் தாமும் கைத்தொண்டு செய்து மக்களைத் தொண்டு நெறியிற் செலுத்திஞர். இவற்றை நோக்கியே சேக்கிழார் இவ் இரு பெருமக்களையும்,

"பொருட்சமய முதற்சைவ நெறிதான் பெற்ற
புண்ணியக்கண் இரண்டு"

என்று, சைவசமயத்தின் இருகண்களாகக் கூறிஞர்.

சுந்தரர், ஆண்டவனுக்குச் செய்யும் தொண்டோடு தொண்டுநெறி முடிந்துவிடவில்லை, அடியார்க்குச்செய்யும் தொண்டிஞலேதான் தொண்டுநெறி முற்றுப்பெறுகின்றது என்பதை விளக்கியருளிஞர். அதனுல் அவரைச் சேக் கிழார்,

"தேசம் உய்யத் திருத்தொண்டத்
தொகைமுன் பணித்த திருவாளன்"

என்று குறித்தார்.




நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பிய ஞானசம்பந்தர்




உ

குருபாதம்

# திருஞானசம்பந்தர் வரலாறு

"வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞானசம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்."

—பெரியபுராணம்.

**திருவவதாரம் :**

சோழவள நாட்டிலே, தஞ்சை மாவட்டத்திலே, சீகாழிப் பதியிலே, அந்தணர் மரபிலே, கவுணியர் குலத்திலே சிவபாத இருதயரும் பகவதி அம்மையாரும் வேதநெறி தழைத்தோங்க மிகு சைவத் துறை விளங்க இல்லறம் நடத்தி வந்தனர். அவ்விருவரது பெருந்தவத்தால் கி. பி. 7—ஆம் நூற்றாண்டில் அவ்விருவருக்கும் மகவாய்த் தோன்றினர் திருஞானசம்பந்தர். அவதரித்த நாளோ சிவபெருமானுக்கு உகந்த திருவாதிரைத் திருநாள்.

**ஞானப்பால் உண்டமை :**

ஞானசம்பந்தப் பிள்ளையார் மூன்றாண்டு நிறையப் பெற்றார். நீராடச் சென்ற தந்தையாருடன் தாமும் திருக்குளம் சார்ந்தார். சிவபாத இருதயர் மைந்தனைக் கரையில் அமரச்செய்து நீருள் மூழ்கி அகமருடன ஜெபம் செய்தார். தந்தையைக் காணாமையாலும், முன்னைத்தவம் தலைக்கூடியதாலும் திருத்தோணிச் சிகரம் பார்த்து அம்மே! அப்பா! என்று அழைத்தருளி அழுதருளினர். திருத்

தோணிபுரப்பெருமான் உமா தேவியாரோடும் விடைமீதமர்ந்து காட்சி கொடுத்தனர். 'உவமை யிலாக் கலைஞானமும் உணர்வரிய மெய்ஞ்ஞானமும் கலந்த திருமுலைப்பால் ஊட்டுவாயாக' எனப் பெருமான் பணித்தார். அப்படியே பெருமாட்டியும் 'எண்ணரிய சிவஞானத்து இன்னமுதம் குழைத் தருளி உண் அடிசில்' என ஊட்டினர். ஞானம் உண்ட பிள்ளையார் சிவஞானச் செல்வராய்த் திகழ்ந்தார். நீராடிய சிவபாத இருதயர், பால்வழிய நின்ற பிள்ளையைப் பார்த்து யார்கொடுத்த எச்சிற் பாலை உண்டாய் எனக் கோல் கொண்டோங்கினர். உடனே ஞானசம்பந்தர் தமக்குப் பால் கொடுத்த பரம்பொருளை அடையாளங்களுடன் சுட்டித் "தோடுடைய செவியன்" என்ற திருப்பதிகம் பாடினர்.

**பொற்றாளமும், முத்துச் சிவிகையும் பெறல் :**

சிலநாள் கழித்துத் திருக்கோலக்காவிற்கு எழுந்தருளினர். கையினல் தாளம் இட்டு "மடையில் வாளை" என்ற திருப்பதிகம் பாடினர். பாட்டிற்கு உருகும் பரமன் கை நோவுமென்று ஐந்தெழுத்துவரையப்பெற்ற பொற்றாளம் அளித்தருளினர். இவர் பெருமை கேட்ட மக்கள் தங்கள் தங்கள் ஊருக்கு எழுந்தருள வேண்டினர். முதலில் தமது தாய் பிறந்த ஊராகிய திருநனிபள்ளி சார்ந்தார். பிள்ளையார் பெருமையைக் கேள்வியுற்ற திருநீலகண்ட யாழ்ப்பாணர், தமது மனைவியோடும் சீகாழிக்கு வந்து தரிசித்தார். அவரது பாடல்களுக்குத் தாம் யாழ் வாசித்தார். அதுமுதல் பிள்ளையாருடனிருந்து பிள்ளையார் பாடல்களையெல்லாம் யாழில் அமைத்து வாசித்து வரலானர். திருஞானசம்பந்தர், சிதம்பரம் முதலிய பல தலங்களையும் தரிசித்து நடுநாட்டில் உள்ள திருநெல்வாயிலரத்

துறை சார்ந்தார். களைப்பினால் மாறன்பாடியில் அமர்ந்து அன்றிரவு நித்திரை செய்தார். அரத்துறைப்பெருமான் முத்துச் சிவிகை, முத்துக் குடை, சின்னம் முதலியவற்றை அருளினர். அவற்றை இறையருளெனப் பெற்ற ஞானசம்பந்தர் "எந்தை ஈசன் எம்பெருமான்" என்ற திருப்பதிகம் பாடிப் பரவினர்.

**உபநயனம் :**

பிறகு உபநயனப் பருவத்தில் உலகியலுக்கேற்ப ஞானசம்பந்தருக்கு உபநயனம் நடைபெற்றது. ஓதாதே வேதம் உணர்ந்த உயர் ஞானசம்பந்தர், அங்கு வந்திருந்த மறையோர்கட்கு உள்ள ஐயங்களை அகற்றி வேத முடிபாகிய ஐந்தெழுத்தின் பெருமையைத் "துஞ்சலும் துஞ்சலிலாத போழ்தினும்" என்ற திருப்பதிகம் பாடி விளக்கியருளினர்.

**முத்துப் பந்தல் பெறல் :**

ஞானசம்பந்தரது பெருமையைக் கேள்வியுற்ற திருநாவுக்கரசர், ஞானசம்பந்தரைக் காண்பதற்குச் சீகாழிக்கு எழுந்தருளினர். பிள்ளையாரும் அவரை எதிர்கொண்டழைத்தார். இருவரும் அருட்கடலும் அன்புக்கடலும் ஆம் எனத் திகழ்ந்தனர். பின்னர் ஞானசம்பந்தர் திருப்பாச்சிலாச்சிராமம் பணிந்து கொல்லிமழவன் மகளைப் பிடித்து நின்ற முயலகன் என்னும் நோயைப் போக்கினர். திருச்செங்கோடு என வழங்கும் திருக்கொடிமாடச் செங்குன்றூர் சென்றபோது அடியவர்களை விஷஜுரம் பற்றியது. திருநீலகண்டத் திருப்பதிகம் பாடி அவ்விஷ நோயைப் போக்கினர். பிள்ளையார் பட்டீச்சரத்தை அடைந்தபோது வெயில் மிகுதியாயிருந்தால் திருவருளால் சிவபூதம் ஒன்று முத்துப்பந்தல் கொடுத்தது.

**பிற அற்புதங்கள் :**

பிறகு திருவாவடுதுறை சார்ந்தார். தந்தையார் வேள்வி செய்தற்குப் பொருள் வேண்டினர். ஆவடுதுறை அரனை "இடரினும் தளரினும்" என்ற பதிகத்தால் போற்றினர். பொற்கிழி பெற்றுச் சிவபாத இருதயரிடம் 'தீதுநீங்க நல்வேள்வி செய்க' எனக் கொடுத்தார். திருநீலகண்ட யாழ்ப் பாணரின் தாய் பிறந்த ஊராகிய தருமபுரம் சென்று தரிசித்தார். "மாதர்மடப் பிடியும்" என்ற பதிகத்தால் பதிக இசை யாழிலடங்காமையை விளக்கியருளினர். திருமருகல் சேர்ந்தார். கணவனுக வர இருந்த வணிகன் விஷந்தீண்டி இறந்ததால் கதறி அழுதாள் ஒரு நங்கை. அந்நங்கையின் துயரைத் துடைக்க எண்ணிச் "சடையாய் எனுமால்" என்ற திருப்பதிகம் பாடி வணிகனை உயிர்பெற்று எழச் செய்தார். பிறகு திருச்செங்காட்டங்குடி, திருப்புகலூர் தரிசித்தார். திருநாவுக்கரசரைக் கண்டு அவர் வாயிலாக ஆரூரில் நிகழ்ந்த ஆதிரைச் சிறப்பைக்கேட்டு ஆரூரரனைத் தொழுதார். பிறகு அப்பரும் சம்பந்தரும் திருவீழிமிழலை சேர்ந்தனர். அவ்வூர்ப் பெருமான் தோணியப்பரைப்போல் காட்சிதந்தனர். அதுகண்ட இருவரும் அவ்வூரிலேயே சிலநாள் தங்கினர். அப்பொழுது நாட்டில் பஞ்சம் உண்டாயிற்று. பரமன் அளித்த படிக்காசு கொண்டு இருவரும் ஆயிரக்கணக்கான அடியார்களுக்குப் பறைசாற்றிச் சோறளித்தனர். பிறகு வேதாரணியம் என்னும் திருமறைக்காடு சென்றனர். நேரே கும்பிட எண்ணியவர்களாய் மறைகளால் பூசித்து அடைக்கப்பட்டிருந்த கதவினைத் திருநாவுக்கரசர் பாடலால் திறக்கச் செய்து, தாம் அடைக்கப் பாடினர். அது முதல் திறக்கவும் அடைக்கவுமாக இருந்து வருகிறது அக்கதவு.

**பாண்டி நாட்டில் சைவம் :**

*பாண்டி நாட்டில் நெடுமாற பாண்டியன் சமண்சமயம் சார்ந்து இருந்தமையை மங்கையர்க் கரசியார், குலச்சிறையார் என்ற இருவர் வாயிலா கத்தெரிந்து மதுரைக்குப் புறப்பட்டார். நாளும் கோளும் நலமில்லாதிருந்தும் உமையொரு பாகன் உள்ளத்திருப்பதால் "அவை நல்ல நல்ல" என ஏகினர். பாண்டியன் வெப்புநோய் அகற்றினர். அனல் வாதத்தாலும், புனல் வாதத்தாலும் அமணர் களை வென்ருர். பாண்டி மன்னனையும், பாண்டி நாட்டு மக்களையும் சைவம் தழுவச்செய்தார். பாண்டி நாட்டில் உள்ள தலங்களைத் தரிசித்தார். சோழநாடு மீண்டார். பிறகு பல தலங்களைத் தரிசித்துத் திருப்பூந்துருத்தி அடைந்தார். அப்பர் சுவாமிகள் இவரது சிவிகையைத் தாங்கியமை யறிந்து உடனே கீழிறங்கி இருவரும் அளவளாவி இருந்தனர். திருஓத்தூரில் ஆண்பனைகளைப் பெண் பனைகளாக்கிக் காய்க்கச் செய்தார். மயிலாப்பூர் சிவநேசச் செட்டியாரின் மகள் பூம்பாவை பாம்பு தீண்டி இறக்க, அவளது எலும்பைக் குடத்தில் சேமித்து வைத்தார் சிவநேசர். அதனை அறிந்த ஞானசம்பந்தர் திருக்கோயில் முன் அக்குடத்தைக் கொணர்வித்து "மட்டிட்ட புன்னை" என்ற பதிகம் பாடி உயிர்ப்பித்தார்.*

**சோதியிற் கலத்தல் :**

*பெற்ருேர் விருப்பத்திற்கிணங்கவும், வேத நெறியில் நின்று காட்டவும் ஆச்சாள்புரம் என வழங்கும் திருநல்லூர்ப்பெருமணத்தில் நம்பாண் டார் நம்பிகளின் திருமகளை மணமகளாக ஏற்று "இந்த இல்லொழுக்கம் வந்து சூழ்ந்ததே இவள் தன்னேடும் அந்தமில் சிவன்தாள் சேர்வன்" என்ற*

கருத்தமையக் 'கல்லூர்ப் பெருமணம்' என்ற பதிகம் பாடினார். பெருமானது அசரீரியின்படி மனைவியொடும், உடன் வந்தாரோடும் வைகாசி மூல நன்னாளில் அங்குத் தோன்றிய சோதியில் கலந்தார். இவர் அருளிய திருப்பதிகங்கள் 383 இவை முதல் மூன்று திருமுறைகளாகத் திகழ்கின்றன.

பரசமய கோளரியைப் பாலறு வாயனைப்பூம்
பழனம் சூழ்ந்த
சிரபுரத்துத் திருஞான சம்பந்தப் பெருமானைத்
தேய மெல்லாம்
குரவையிடத் தமிழ்வேதம் விரித்தருளும் கவுணியர்தம்
குலதீ பத்தை
விரவியெமை ஆளுடைய வென்றிமழ இளங்களிற்றை
விரும்பி வாழ்வாம்.

—ஸ்ரீ சிவஞான சுவாமிகள்.

---



திருநாவுக்கரசு நாயனார்

௨.

குருபாதம்

# 2. திருநாவுக்கரசர் வரலாறு

இடையறுப் பேரன்பும் மழைவாரும் இணைவிழியும்
உழவாரத்தின்
படையறுத் திருக்கரமும் சிவபெருமான் திருவடிக்கே
பதித்தநெஞ்சம்
நடையறுப் பெருந்துறவும் வாகீசப் பெருந்தகைதன்
ஞானப்பாடல்
தொடையறுப் செவ்வயும் சிவவேடப் பொலிவழகும்
துதித்துவாழ்வாம்.

—ஸ்ரீசிவஞான சுவாமிகள்.

### அவதாரம்

சைவ சமயாசாரியர் நால்வருள் இரண்டாமவராக வைத்து எண்ணப்படுபவர் திருநாவுக்கரசர். கி.பி. 7-ம் நூற்றுண்டின் முற்பகுதியில் நடுநாட்டில் உள்ள திருவாமூரில், சைவவேளாளர் குலத்தில், குறுக்கையர் குடியில், புகழனார்க்கும், மாதினியார்க்கும் அருந்தவச் செல்வராய்த் திலகவதியார்க்குப் பின் தோன்றியவர். மருள்நீக்கியார் என்பது இவரது பிள்ளைத் திருநாமம். இவரது இளமைப் பிராயத்திலேயே பெற்றோர் பிரானடி சேர்ந்தனர். பெற்றோரது பிரிவாலும், பெற்றோர்களால் தமக்கு மணாளராக உறுதிசெய்யப்பட்ட கலிப்பகையார் போரில் உயிர்துறக்க நேர்ந்ததாலும் ஏற்பட்ட

வருத்தத்தால் தானும் உயிர்துறக்க எண்ணினார் திலகவதியார். இஃதறிந்த மருள்நீக்கியார் தமக்கைக்கு முன் தாம் உயிர்துறக்கத் துணிந்தார். தம்பியார் உளராகவேண்டும் என வைத்த கருணையினாலே உயிர்தாங்கி மனைத்தவம் புரிந்துவந்தார் திலகவதியார். இந்நிலையில் மருள் நீக்கியார் உயிர்க்கு உறுதி பயக்கத்தக்க சமயம் எதுவென ஆராய்ந்து சமண் சமயம் சார்ந்தார். அச்சமயத்தில் 'தருமசேனர்' என்ற பட்டம்பெற்றுச் சிறப்பெய்தினார்.

## சூலை தீர்த்தாட்கொள்ளல்

தம்பியருக்காக உயிர்தாங்கித் தவம் புரியும் திலகவதியார் திருவதிகைப் பெருமானிடம் 'தம்பி சைவம் சாரவேண்டும்' என்று விண்ணப்பித்து வந்தார். அதிகைப் பெருமானும் 'அன்னவனைச் சூலை கொடுத்து ஆட்கொள்வோம்' என்று அருள் செய்தார். சில நாளில் தருமசேனரான மருள்நீக்கியார் சூலைநோயால் துன்புற்றார். அமண சமய அருகரால் சூலை தீராதுபோகவே தம் தமக்கையாரிடம் சார்ந்து பணிந்தார். திலகவதியார் திருவாளன் திருநீற்றை ஐந்தெழுத்தோதிக் கொடுத்து அதிகைப் பெருமான் சந்நிதிக்கு அழைத்துச் சென்றார். ஆண்டவனருளால் பாடும் உணர்வுபெற்ற மருள்நீக்கியார் "கூற்றாயினவாறு விலக்ககிலீர்" என்ற திருப்பதிகம் பாடிப் பரவினார். இறையருளால் சூலை நீங்கியதோடு திருநாவுக்கரசர் என்ற பெயரும் பெற்றார். "சூலை தீர்த்து அடியேனை ஆட்கொண்டாரே" என்பது அப்பரடிகள் அகச்சான்று.

### நீற்றறை நின்மலன் அருளால் குளிர்ந்தது

இச்செய்தி யுணர்ந்த அமணர்களும், அமணர் வயப்பட்ட மகேந்திரவர்மப் பல்லவ மன்னனும் இவருக்குப் பலவகையிலும் இன்னல் விளைவிக்கத் திட்டமிட்டு நாவுக்கரசரை அழைத்துவரச் செய்தனர். நாவரசர் "நாமார்க்கும் குடியல்லோம்" என்ற தாண்டகம் பாடி அவரெதிர் சென்றார். அமணர்கள் இவரை நீற்றறையில் (சுண்ணம்புக் காளவர்ய்) இட்டனர், அங்கு "மாசில்வீணை" என்ற திருப்பதிகம் பாடி நீற்றறையைக் குளிரச் செய்தார்.

### நஞ்சும் அமுதாம் எங்கள் நாதன் அடியார்க்கு

நீற்றறையில் வேகாது பிழைத்த திருநாவுக்கரசர் 'தங்கள் சமண் சமயத்தில் கற்றிருந்த மந்திர வலிமையால் தான் நீற்றறையில் வேகாது பிழைத்தார்' என்ற துர்ப்போதனையை அரசனுக்குக் கூறினர். நஞ்சுகலந்த பால்சோற்றை நாவரசர்க்கு அருத்தினர். 'நஞ்சும் அமுதாம் எங்கள் நாதன் அடியார்க்கு' என்று நஞ்சுணவை ஏற்று உண்டு ஊனமொன்றும் இன்றி உயிர்வாழ்ந்தார் நாவரசர்

"வஞ்சனைப் பாற்சோறுக்கி வழக்கிலா அமணர் தந்த
நஞ்சமு தாக்குவித்தார் நனிபள்ளி யடிகளாரே"

என்பது அப்பர் சுவாமிகள் அகச்சான்று.

### இடர்செய ஏவிய யானை பணிதல்

நஞ்சு உண்டும் உயிர்பிழைத்த நாவுக்கரசரைக் கொலைத் தொழில் வல்ல யானையைவிட்டு இடறச் செய்தனர். மதயானை வருதலைக்கண்ட நாவரசர்

"அஞ்சுவது யாதொன்றும் இல்லை அஞ்சவருவதும் இல்லை" என்ற உள்ள உறுதியோடு "சுண்ணவெண் சந்தனச்சாந்தும்" என்ற திருப்பதிகம் அருளினர். கொலைத்தொழில்வல்ல யானையும் நாவரசரை வலம் வந்து வணங்கித் தன்னையேவிய அமணர்களையே துன்புறுத்தியது.

"தலைவணங்கிய ஈசன் தமர்களைக்
கொலைசெய் யானைதான் கொன்றிடுகிற்குமே"?

என்பது அப்பர்சுவாமிகள் அகச்சான்று.

**கல்லே மிதப்பாய்க் கடலைக் கடந்தது**

சமணர்கள் தாங்கள் செய்த சூழ்ச்சிகள் பல வற்றாலும் துன்புறாத திருநாவுக்கரசரைக் கடைசி யாகக் கல்லில் கட்டிக் கடலில் இட்டனர். அரன் ஐந்தெழுத்தை ஓதி அக்கல்லே தோணியாகக் கடலில் மிதந்துவர, திருப்பாதிரிப்புலியூருக்கு அரு கில் கரையேறினர். கரையேறிய இடம் கரையேற விட்ட குப்பம் என்ற பெயரோடு இன்றும் திகழ் கிறது.

"கல்லினோடு எனைப்பூட்டி அமண் கையர்
ஒல்லை நீர்புக நூக்கஎன் வாக்கினல்
நெல்லு நீள்வயல் நீலக்குடி அரன்
நல்ல நாமம் நவிற்றி உய்ந்தேனன்றே."

"கல்துணைப் பூட்டியோர் கடலில் பாய்ச்சினும்
நல்துணை யாவது நமச்சிவாயவே.

என்பன அப்பரடிகளின் அகச்சான்று.

**சூலக் குறியும் இடபக் குறியும்,**
**ஆலமுண் டானது அருளால் பெற்றது.**

கடலினின்றும் கரையேறிய திருநாவுக்கரசர் தமக்குற்ற துன்பங்களைத் துடைக்க இறைவன்

தந்தையும், தாயும், தமக்கையுமாய் உதவி செய்த நன்றியையுணர்ந்து போற்றுவாராய்த் திருப்பாதிரிப் புலியூர்த் திருக்கோயிலைச் சார்ந்து, "ஈன்றாளுமாய் எனக்கெந்தையுமாய் உடன்றோன்றினராய்," என்ற திருப்பதிகம் பாடிப் பரவினர். அமணர் சூழ்ச்சியும் நாவரசர் மாட்சியும் உணர்ந்த பல்லவ மன்னன் தானும் சமணசமயத்தை விட்டுச் சைவம் சார்ந்தான். அமண் பாழிகளையும் பள்ளிகளையும் இடித்து அக் கற்களைக் கொண்டு திருவதிகையில் 'குணபர வீச்சரம்' என்ற சிவன் கோயிலை எடுப்பித்தான். பின்னர் நாவரசர் சிவதல யாத்திரை மேற்கொண்டு திருப்பெண்ணாகடம் எனவழங்கும் திருத்தூங்கானை மாடம் சென்று தொழுதார். அங்குள்ள இறைவனிடத்துத் தாம் சமண் சமயம் சார்ந்ததால் ஏற்பட்ட மாசு நீங்க சூலக்குறியும் இடபக்குறியும் பொறித்தருள வேண்டினர். அவ்வாறே இறையருளால் சூலக்குறியும் இடபக்குறியும் பொறிக்கப் பெற்றார்.

பொன்னார் திருவடிக்கு ஒன்றுண்டு விண்ணப்பம் போற்றி
[செய்யும்
என் ஆவி காப்பதற்கு இச்சையுண்டேல் இருங்கூற்று அகல
மின்னாரு மூவிலைச் சூலம் என்மேற் பொறிமேவு கொண்டல்
துன்னார் கடந்தையுள் தூங்கானை மாடச்சுடர்க் கொழுந்தே'

என்பது அப்பர் அடிகளின் அகச்சான்று.

**தில்லைக்கூத்தன் திருவடி தொழுதது**

சூலக்குறியும் இடபக்குறியும் பொறிக்கப்பெற்ற திருநாவுக்கரசர் பல தலங்களையும் வணங்கிக் கொண்டு தில்லையை அடைந்து கூத்தப்பெருமான் குஞ்சிதபாதம் தொழுதார். "என்று வந்தாய் எனும் எம்பெருமான்றன் திருக்குறிப்பை" புலப்

படுத்திப் பதிகங்கள் பல பாடினார். அவ்வூரை விட்டுப் புறப்படுங்கால் அத்தலத்தை உடலால் புரண்டு புரண்டு (அங்கப்பிரதக்ஷிணம்) வலம்வந்தார்.

**அரசும் கன்றும் அரனடி தொழுதது**

திருநாவுக்கரசர் தில்லையில் இருந்தபொழுது சீகாழியில் உமாதேவியாரால் ஞானப்பால் உண்டு திருஞானசம்பந்தராய்த் திகழ்ந்த ஆளுடையபிள்ளையாரின் அருள் திறம் கேட்டு அவரை வணங்க விரும்பினார். சீகாழி எல்லையை அடைந்தார். நாவரசர் வருவதறிந்த திருஞானசம்பந்தர் இவரைச் சீகாழி எல்லையில் பரிவாரங்களோடு எதிர்வந்து வரவேற்றார். சிவவேடப் பொலிவழகோடு திகழ்ந்த நாவரசரை அப்பரே! என்று அழைத்தருளினார். இதுமுதல் அப்பர் என்ற பெயர் வழங்கலாயிற்று. நாவரசரும் கலைஞானக்கன்றாகிய ஞானசம்பந்தர் முன் "அடியேன்" என்று மறுமொழி கூறினார். ஞானக்கன்றும் சம்பந்தரும், நாவுக்கரசராம் அப்பரும் தோணியப்பரைப் பதிகம்பாடிப்பரவினர்.

**நல்லூர்ப்பெருமான் நற்றாள் சூட்டல்**

காழிநாதன் கழலடி வணங்கிய அப்பரடிகள் பல தலங்களையும் வணங்கிக்கொண்டு திருச்சத்தி முற்றம் சென்று அங்குள்ள இறைவனிடம் தமக்குத் திருவடி தீக்ஷை அருளுமாறு வேண்டினார். பெருமானும் நல்லூருக்கு வருக என்றருளி திருவடி சூட்டியருளினார்.

"கோவாய் முடுகியடுதிறல் கூற்றம் குமைப்பதன்முன்
பூவாரடிச் சுவடு என்மேல் பொறித்துவை"

"இனமலர்கள் போதவிழ்ந்து மதுவாய்ப் பில்கி
நனைந்தனைய திருவடிஎன் தலைமேல் வைத்தார்
நல்லூர் எம்பெருமானார் நல்லவாறே"

என்பன அப்பரடிகள் அகச்சான்று,

### அரசரும் அப்பூதியடிகளும்

திருவடிதீக்ஷை பெற்ற நாவரசர் பல தலங்களையும் வணங்கிக்கொண்டு திங்களூர் வந்தடைந்தார். அந்தணரின் மேம்பட்ட அப்பூதியடிகளார் தமது புதல்வருடன் சாலை, குளம், கிணறு, தண்ணீர்ப் பந்தல் முதலிய எல்லா அறங்களையும் திருநாவுக்கரசர் பெயராலேயே அமைத்திருந்ததைக் கண்டும் கேட்டும் காரணம் அறிவதற்காக அப்பூதியடிகளைக் காணச்சென்றார். அப்பூதியடிகளின் செந்தண்மையைக்கண்ட நாவரசர் அவரது விருப்பத்திற்கிணங்கி அமுதுகொள்ள இசைந்தார். திருவமுது படைப்பதற்கு இலை கொணரச்சென்ற மூத்த திருநாவுக்கரசு அரவம் தீண்டியதால் வாழையிலையைத் தாயிடம் சேர்ப்பித்து உயிர்நீத்தார். இறந்த பிள்ளையை மறைத்துவைத்து அப்பருக்கு அமுது செய்விக்க முயன்றனர். அமுதுகொள்ள எழுந்தருளிய அப்பரடிகள், மூத்த திருநாவுக்கரசு அரவந்தீண்டி இறந்ததை யறிந்து அவ்வுடலைத் திருக்கோயிலின்முன் கொண்டுவரச்செய்து "ஒன்று கொலாமவர்" எனுந் திருப்பதிகம்பாடி உயிர் பெற்றெழச் செய்தார்.

### அப்பர் சம்பந்தர்க்கு ஆதிரைச் சிறப்பைச் செப்பி மகிழ்ந்தார் திருப்புக லூரில்.

விடம் தீர்த்த திருப்பதிகம் அருளிச்செய்த திருநாவுக்கரசர் திருவாரூர்த் தியாகேசப் பெருமான் திருவடிதொழுது "தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியம் தமக்கும் உண்டாகுமோ" என்ற கருத்தமைந்த பதிகம் முதலாகப் பல பதிகங்கள் பாடிப் பரவினர். திருவாதிரைத் திருநாளில் தியாகேசப்பெருமான் திருவுலாக்காட்சியைக் கண்டுதொழுத அப்பரடிகள் அங்கிருந்தும் திருப்

புகலூர் சென்றார். அப்பொழுது திருஞானசம்பந்தர் சீகாழியினின்றும் புறப்பட்டுப் பல தலங்களையும் வணங்கித் திருப்புகலூரை அடைந்து முருக நாயனார் திருமடத்தில் எழுந்தருளியிருந்தார். அவர் திருநாவுக்கரசரின் வரவை யறிந்து, அடியார்கள் புடைசூழ எதிர்கொண்டு வரவேற்றார். ஞானசம்பந்தர் திருநாவுக்கரசர்பால் ஆரூரில் நிகழ்ந்த ஆதிரைச் சிறப்பைக் கேட்டுத் தாமும் திருவாரூர் சென்று தொழுது திரும்பினார். திரும்புங்கால் திருநாவுக்கரசர் அடியார்கள் புடைசூழ ஞானசம்பந்தரை வரவேற்று மகிழ்ந்தார். இஃது இரண்டாவது சந்திப்பு.

**படிக்காசு பெற்றுப் பஞ்சம் தீர்த்தது**

ஞானசம்பந்தரும் நாவுக்கரசரும் அடியார்கள் புடைசூழ, திருக்கடவூர் முதலிய பல தலங்களையும் வணங்கிக்கொண்டு திருவீழிமிழலை சென்றனர். அப்பொழுது மழையின்மையால் பஞ்சம் உண்டாயிற்று. அப்பஞ்சத்தால் அடியவர்கள் துன்புறா வண்ணம் கோயிலின் கிழக்குப் பீடத்தில் திருஞானசம்பந்தருக்கும், மேற்குப் பீடத்தில் திருநாவுக்கரசருக்கும் மிழலைப்பெருமான் நாள்தோறும் படிக்காசு வைத்துவந்தார். அக்காசுகொண்டு அடியவர்கட்கு இருமடங்களிலும் பறை சாற்றிச் சோறிட்டனர். உழவாரத் தொண்டு செய்த பான்மையினால் வாசியில்லாக் காசுபெற்றார் வாகீசர். ஞானப்பால் உண்டமையால் திருக்குமாரராம் பான்மைவாய்ந்த ஞானசம்பந்தர் வாசியுள்ள காசு பெற்றார். (வாசி — வட்டம் கொடுத்து மாற்றும் காசு.) "இருந்துநீர் தமிழோடிசை கேட்கும் இச்சையால்காசு நித்தம் நல்கினீர்" என்ற சுந்தரர் வாக்காலும்.

"பாடலங்காரப் பரிசில் காசருளிப் பழுத்த செந்தமிழ் மலர்சூடி
நீடலங்காரத்து எம்பெருமக்கள் நெஞ்சினுள் நிறைந்து நின்றானை"

என்ற திருவிசைப்பாவாலும் இந்நிகழ்ச்சியை நன்கு தெளியலாம்.

**திருமறைக்காட்டில் கதவு திறந்தது**

பஞ்சம் நீக்கிய இருபெருமக்களும் வேதாரணியம் என வழங்கும் திருமறைக் காட்டிற்குச் சென்று திருக்கோயிலை வலம்வந்து வாயிலை அடைந்தனர். கதவு அடைக்கப்பட்டிருப்பதை வினவினர். 'முற்காலத்தில் வேதங்கள் வழிபட்டுத் திருக்காப்பிட்டுச் சென்றன என்பதையும், அது முதல் பக்கத்திலே வாயில் அமைத்து அன்பர்கள் வழிபட்டு வருகின்றனர்' என்பதையும் அங்குள்ளோரால் அறிந்து நேரே கும்பிடவேண்டும் என்ற விருப்புடையோர் ஆயினர். திருஞான சம்பந்தர் நாவுக்கரசரைப் பார்த்துத் திருக்கதவம் திறக்குமாறு பாடியருளுக என்றார். அதற்கிணங்க அப்பர் சுவாமிகள் "பண்ணின் நேர்மொழியாள்" என்று தொடங்கும் திருப்பதிகத்தில் பத்துப்பாடல்கள் பாடியும் கதவு திறவாமையால் பதினோராவது பாடலில் "இரக்கம் ஒன்றிலீர்" என்று பாடி வணங்கிய அளவில் மறைக்கதவம் திறக்கப்பெற்றது. இருவரும் நிலமுறப் பணிந்தனர். திருநாவுக்கரசரது விருப்பத்திற்கு இணங்கத் திருஞான சம்பந்தர் அடைக்கப் பாடினார். அன்றுமுதல் திறக்கவும் அடைக்கவுமாக இருந்து வருகிறது.

**திருவாய்மூரில் சிவனுருக் கண்டது**

திருநாவுக்கரசர் தாம் அரிதின் முயன்று திறக்கப் பாடியருளியதையும், ஞானசம்பந்தர் ஒரு பாடலில் அடைக்கப் பாடியருளிய எளிமையினையும் எண்ணிப் பெருமான் திருவுள்ளக்கிடக்கையை உணராது அயர்ந்தேன் என்ற கவலை உடையவராய்

அறிதுயில் கொண்டார். அப்பொழுது வெண்ணீ றணிந்த கோலத்தோடு இறைவன் எழுந்தருளி 'நாம் திருவாய்மூரில் இருப்போம் அங்கு எம்மைத் தொடர்ந்துவா' என்றருளி மறைந்தனர். துயிலு ணர்ந்த நாவரசர்.

"எங்கே யென்னை இருந்திடம் தேடிக்கொண்டு
அங்கே வந்தடையாளம் அருளினார்
தெங்கே தோன்றும் திருவாய்மூர்ச் செல்வனார்
அங்கே வாவென்று போனார் அதென்கோலோ."

என்ற பாடலை முதலாகக்கொண்ட பதிகம் பாடிக் கனவில் தோன்றிய வடிவத்தோடு இறைவன் வழிகாட்ட உடன் சென்ற நாவரசருக்கு ஒரு பொற் கோயிலைக் காட்டி மறைந்தருளினார் இறைவன். ஞானசம்பந்தர், நாவரசர் திருவாய்மூர்ச் செல் கின்றார் என்பதையறிந்து அவரும் அங்குச் சென்றார்.

"திறக்கப்பாடிய என்னினும் செந்தமிழ் உறைப் புப்பாடி யடைப்பித்தார் உந்நின்றார்" என்று நாவரசர் பாடிய அளவில் திருஞானசம்பந்தருக்கு இறைவன் காட்சி கொடுத்தருளினார். கண்டு தரிசித்த ஞானசம்பந்தர் நாவுக்கரசருக்கும் காட்டினார். திருநாவுக்கரசர் கண்டு மகிழ்ந்து, "பாட அடியார்பரவக்கண்டேன்" என்ற திருத் தாண்டகம் பாடிப் பரவினார். இருவரும் திருமறைக் காடு சேர்ந்தனர்.

**பழையாறை வடதளிப் பரமனைக் காணுதல்**

மங்கையர்க்கரசியார் குலச்சிறையார் இருவ ரது வேண்டுகோட்கிணங்கித் திருஞானசம்பந்தர் பாண்டிய நாட்டிற்கு எழுந்தருளினார். திருநாவுக் கரசர் திருமறைக்காட்டினின்றும் பல தலங்களையும் தரிசித்துக்கொண்டு பழையாறையையடைந்து

வடதளியென்னும் கோயிலை நோக்கித் தொழுதார். அக்கோயிலிலுள்ள சிவலிங்கமூர்த்தியை மறைத்துச் சமணர்கள் அருகதேவனை வைத்துத் தொழுது வந்தனர். இஃது அறிந்த அப்பமூர்த்திகள் சிவலிங்க மூர்த்தியை வழிபட்டே உணவுகொள்வேன் என்று விரதமிருந்தார். அடியவர் கருத்தறிந்து முடிக்கும் ஆண்டவன் சோழமன்னன் கனவில் தோன்றித் தான் இருக்கும் இடத்தை அடையாளங்களுடன் சுட்டி ஆலயம் அமைக்க ஆணையிட்டருளினர். அவ்வண்ணமே சோழமன்னன் அமணர் மறைத்து வைத்த சிவனுருவைக் கண்டு ஆலயம் அமைத்து வழிபட்டான். அப்பரடிகளும் சென்று வழிபட்டுத்

"தலையெலாம் பறிக்குஞ் சமண் கையருள்
நிலையினல் மறைத்தால் மறைக்கொண்ணுமோ"

என்று தொடங்கும் திருப்பதிகம் பாடிச் சிலநாள் தங்கிப் பணிபுரிந்தார்.

### திருப்பைஞ்ஞீலியருகில் பொதிசோறு பெறுதல்

திருப்பழையாறைவடதளியினின்றும் பல தலங்களையும் வணங்கிக்கொண்டு திருப்பைஞ்ஞீலிக்கு எழுந்தருளினர். அப்பொழுது பசியும் நீர்வேட்கையும் வருத்தின. உடல் தளர்ந்தாலும் உளம் தளராவாகீசர் வரும் வழியில் பைஞ்ஞீலி இறைவர் சோலையும், குளமும் தோற்றுவித்துத் தாம் ஒரு அந்தணர் கோலத்தில் பொதிசோறு சுமந்துசென்று நாவரசருக்கு அளித்து அருந்தச் செய்தார். உணவு அருந்திக் களைப்பு நீங்கிய நாவரசரை அந்தணர் வடிவுகொண்ட இறைவன் பைஞ்ஞீலிக்கு அழைத்துச்சென்று மறைந்தருளினர். அவ்வதிசயம் கண்ட அப்பரடிகள் பதிகம் பாடித் துதித்தார்.

## திருவை யாற்றில் கயிலைக் காட்சி

பைஞ்ஞீலிப் பரமனைப் பரவிய நாவரசர் நடு நாட்டுத் தலங்களையும், தொண்டை நாட்டுத் தலங்களையும் தரிசித்துத் திருக்கயிலை யாத்திரையை மேற்கொண்டார். இமயமலைப் பகுதியில் கரடுமுரடான பாதைகளில் நடந்தும் ஊர்ந்தும் நகர்ந்தும் உடலுறுப்புக்களெல்லாம் தேய்ந்து சோர்ந்தார். இந்நிலையில் கயிலைப் பெருமான் முனிவர் வேடம் தாங்கி நாவரசர் முன்தோன்றி "மனிதரால் அடையத்தக்கதன்று திருக்கயிலை" என்று அறிவித்தார். அதுகேட்ட அரசர் "ஆளும்நாயகன் கயிலையில் இருக்கை கண்டல்லால் மாளும் இவ்வுடல் கொண்டு மீளேன்" என்று உறுதி உரைத்தார். அவரது மனத் திண்மை கண்ட பெருமான் மறைந்து 'ஓங்கும் நாவினுக் கரசனே எழுந்திரு' என்று அசரீரீ அருளினர். அதுகேட்டு ஊறுநீங்கிய உடலுடன் எழுந்த நாவரசர் கயிலைக்காட்சி வேண்டிப் பணிந்தார். இறைவன் 'அருகில் உள்ள இத்தடாகத்தில் மூழ்கித் திருவை யாற்றையடைந்து அங்கு நம்திருக்கயிலைக் காட்சியைக் காண்பாயாக' என்று அருளினர். அவ்வாறே அருகில் உள்ள தடாகத்தில் மூழ்கி ஐயாற்றில் உள்ள திருக்குளத்தில் எழுந்து திருக்கயிலையிலுள்ள காட்சியைக் கண்டு "மாதர்ப் பிறைக் கண்ணியானை" என்ற திருப்பதிகம் பாடிப் பரவினர்.

## திருப்பூந் துருத்தியில் திருமடம் அமைத்தல்

கயிலைக் காட்சி கண்ட திருநாவுக்கரசர் திருமழபாடி முதலிய தலங்களை வணங்கி, திருப்பூத்துருத்தியையடைந்து இறைவனைத் தொழுதார். அங்குப் பலநாள் தங்கிப் பணிபுரிய விரும்பியதால் திங்களும் ஞாயிறும் தோயும் திருமடம் ஒன்று அமைத்தார். உழவாரப்பணி புரிந்ததோடு திருவங்கமாலை முதலிய பல தொகைத் திருப்பதிகங்களையும் அருளிச்

செய்தார். இந்நிலையில் பாண்டிநாடு சென்று சிவ நெறி பரப்பிய திருஞானசம்பந்தர் சோழநாட்டிற்கு வந்து திருநாவுக்கரசர் திருப்பூந்துருத்தியில் எழுந் தருளியிருப்பதைக் கேள்வியுற்றுத் திருப்பூந்துருத் திக்கு எழுந்தருளினர். அஃதறிந்த திருநாவுக்கரசர் ஞானசம்பந்தரை நேரே கண்டு கும்பிடவேண்டு மென்ற விருப்பினராய் அடியவர் எவரும் அறியா வண்ணம் ஞானசம்பந்தர் எழுந்தருளிய பல்லக்கைச் சுமந்துவந்தார். திரும்பூந்துருத்திக்கு அருகில் வந்த ஞானசம்பந்தர். 'அப்பர் எங்குற்ருர்' என வினவ 'உம்முடைய அடியேன் உமது திருவடிகளைத் தாங் கும் பெருவாழ்வுவந்து எய்தப்பெற்று இங்குற் றேன், என்ருர் அப்பர். அதுகேட்ட பிள்ளையார் சிவிகையினின்றும் இறங்கி ஒருவரை ஒருவர் வணங்கி மகிழ்ந்து சிலநாள் அத்தலத்து எழுந்தருளி யிருந்தனர். இது மூன்ருவது சந்திப்பு.

**அரம்பையர் வலையில் அகப்படா திருத்தல்**

திருநாவுக்கரசர் பாண்டிநாட்டுத் தலங்களைத் தரிசித்து, சோழநாடு மீண்டு திருப்புகலூரை யடைந்து உழவாரப் பணி செய்துகொண்டு அங் கேயே தங்கியிருந்தார். அப்பொழுது க்ஷேத்திரக் கோவைத் திருத்தாண்டகம் முதலிய பல பதிகங்கள் பாடினர். புகலூரிறைவன் திருக்கோயில் பிரா காரத்தில் உழவாரப்பணி செய்யும்பொழுது. இறை யருளால் பொன்னும் நவமணிகளும் தோன்றின அவற்றையெல்லாம் கல்லோடும் புல்லோடும் தூக்கி எறிந்தார். இவரது நடையருப் பெருந்துறவை நாட்டிற்கு எடுத்துக் காட்டத் தேவ அரம்பையர் களை இவர்முன்னர்த் தோற்றுவித்தார் இறைவன். அவர்களது ஆடல் பாடல்களாலும் இவரது உள்ளம் மாறுபடவில்லை. மாறுபடாமாண்பைப்

"பொய்ம்மாயப் பெருங்கடலில்" என்று தொடங்கும் திருத்தாண்டகப் பதிகத்தால் புலப்படுத்தியுள்ளார்.

**திருப்புக ளூரில் சிவன்தாள் சேர்தல்**

பக்தியின் வடிவுகொண்ட திருநாவுக்கரசர். பரம்பொருளை யடையுங்காலம் அணித்தாகவிருப்பதை யறிந்து ஆண்டவனது புகலாகிய—அடைக்கலப் பொருளாகிய தன்னைப் புகலூர்ப்பெருமான் சேவடிக்கீழ் இருத்துவார் என்ற கருத்துடன் பல திருப்பதிகங்கள் பாடி முடிவாக "எண்ணுகேன் என் சொல்லி எண்ணுகேனே" என்று தொடங்கும் திருத்தாண்டகத்தை அருளிச்செய்து "புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே" என்று புகன்று சித்திரைச் சதய நன்னாளில் திருவடி நீழலில் இரண்டறக் கலந்தார். இவர் அருளிச்செய்த தேவாரத்திருப் பதிகங்கள் 312. இவை 4, 5, 6, திருமுறைகளாக விளங்குகின்றன.

---




சுந்தரமூர்த்தி நாயனார்

# 3. ஸ்ரீசுந்தரர் வரலாறு

**நேசம் நிறைந்த உள்ளத்தால் நீலம் நிறைந்த மணிகண்டத்து.
ஈசன் அடியார் பெருமையினை எல்லா உயிரும் தொழஎடுத்துத்.
தேசம் உய்யத்திருத்தொண்டத்தொகைமுன்பணித்ததிருவாளன்
வாசமலர் மென்கழல் வணங்க வந்தபிறப்பை வணங்குவாம்.**

—*பெரியபுராணம்.*

**கயிலையில் சுந்தரர் :**

*சுந்தரமூர்த்தி சுவாமிகள், ஆலால சுந்தரர் என்ற திருப்பெயரோடு, திருக்கயிலாயத்திலே சிவ பெருமானுக்கு உடனிருந்து பணிவிடை புரிவதாகிய அணுக்கத் தொண்டு ஆற்றிவந்தார். அதுபோல், உமாதேவியாருக்கு அநிந்திதை, கமலினி என்ற இரு சேடியர்களும் அணுக்கத் தொண்டாற்றி வந்த னர். இவர்கள் நாள்தோறும் மலர் கொய்து இறை வனுக்கும் உமாதேவியாருக்கும் சார்த்தி வந்தனர். ஒருநாள் மலர் கொய்யும் தொண்டாற்றுகையில் ஆலால சுந்தரர் அநிந்திதை, கமலினி என்பார்மீது மனம் போக்கினர். அவர்களும் இவர்மீது இச்சை கொண்டனர். எல்லாம் வல்ல இறைவன் இதனை அறிந்து, "ஆலால சுந்தர ! நீ பெண்கள்மீது இச்சை கொண்டமையால் பூவுலகத்தில் மனிதனைப் பிறந்து அப் பெண்களுடன் இன்புறுவாயாக" எனக் கட்டளையிட்டார். அது கேட்ட சுந்தரர் வருத்த முற்றவராய். "அடியேன் மானுட வாழ்வில் மயங்கத் தலைப்படும்பொழுது தேவரீர் தடுத்து ஆட்கொண் டருளவேண்டும்" எனப் பிரார்த்தித்தார். அண்ண லும் அவ்வாறே வரந் தந்து அனுப்பினர்.*

**ஓலையைக் கிழித்தல் :**

*ஆலாலசுந்தரர் நடுநாட்டிலே திருநாவலூரிலே, ஆதி சைவ அந்தணர் மரபிலே, சடையனர், இசை*

ஞானி அம்மையார்என்ற அருந் தவத்துப் பெரியவர் கட்கு மகவாய்அவதரித்தார். பெற்ரேர்களால் நம்பி யாரூரர் என்ற பிள்ளைத் திருநாமம் இடப் பெற்ருர். பரமன் அருளால் பல கலைகளையும் பயின்ருர். நடு நாட்டு மன்னரான நரசிங்கமுனையரையரின் அபி மான புத்திரராய், மன்னவர் திருவும், தங்கள் வைதி கத்திருவும் பொங்க வளர்ந்துவந்தார். மணப்பருவம் உற்ருர். புத்தூர் சடங்கவி சிவாசாரியாருடைய திருமகளைப் பெரியோர் மணம் நேர்ந்தனர், புத்தூரில் திருமணவிழாத் தொடங்கியது, கண்ணு தற் பரம்பொருள் திருக்கயிலையில் வரமளித்தபடியே சுந்தரரைத் தடுத்தாட்கொள்ளவேண்டி விருத்த வேதியராய்த் திருமணப் பந்தலில் எழுந்தருளினர். அங்குக் கூடியிருந்த அந்தணர் அனைவரும் அவரை மகிழ்ச்சியுடன் வரவேற்றனர். வந்தவர், நம்பியாரூரரை நோக்கி; "எனக்கும் உனக்கும் இடையே ஒரு வழக்கு உள்ளது. அவ் வழக்கு, நீ எனது அடிமை என்பதேயாகும். அதனை முடித்தே மணம் துவங்க வேண்டும்" என உரைத்தார். அது கேட்ட அனைவரும் அதிசயித்தனர். நம்பியாரூரர் விருத்த வேதியரை நோக்கி, "ஒரு அந்தணர் மற்ருெரு அந்தணருக்கு அடிமையாதல் நீர் சொல்லத் தான் கேட்டேன். இவ்வாறு சொல்லும் நீர் பித்தரோ" என வெகுண்டு பேசி அவர் கையி லிருந்த ஓலையைப் பற்றிக் கிழித்தெறிந்தார். வேதியர், "இது முறையோ" எனக் கூக்குரலிட அப்போது ஆரூரர் உமது ஊராகிய திருவெண்ணெய் நல்லூர் மறையவர்களிடத்திலேயே இவ் வழக்கைத் தீர்ப்போம்" என்றனர்.

**தடுத்தாட் கொள்ளல் :**

அவ்வண்ணமே, வெண்ணெய்நல்லூர் அந்தணர் மன்றத்தில் மூல ஓலை காட்டி ஆரூரர் அடிமை

என்பதை வேதியர் நிரூபிக்க, சுந்தரர் அடிமையை ஏற்ருர். வேதியரின் இருப்பிடம் வினவினர். கிழ வேதியர் வெண்ணெய் நல்லூர் அருட்டுறை ஆலயத்துட் புகுந்தார். பின் தொடர்ந்த மறையவர்கள் திகைத்தனர். அது கண்ட சுந்தரரும் வியப்புற்ருர். "திருக்கயிலையில் கூறியபடி உன்னைத் தடுத்தாட் கொண்டோம்" என மொழிந்து இறைவன் காட்சி வழங்கினர். உண்மை உணர்ந்த சுந்தரர் அப்போது வழியடிமை யாதுசெய்யவேண்டுமென வேண்டினர். "வன்மைபேசி வன்ருெண்டன் எனும் பெயர் பெற்ருய். நமக்குப் பெருகிய அன்பின் மிக்க அருச்சனை (வழிபாடு) பாட்டேயாகும். ஆதலால், நம்மீது சொற்றமிழ் பாடுக" என ஆணையிட்டார். அது கேட்ட சுந்தரர் எப்படிப் பாடுவேன் என ஏங்கினர். பக்தர்கள் அறிய என்னைப் பித்தன் என்றனை ஆதலால் பித்தனென்றே பாடுக என அடியெடுத்துக் கொடுத்தார். அவ்வடியை முதலாகக் கொண்டு "பித்தா பிறைசூடி" எனும் பதிகம் பாடினர்.

**சித்த வடத்தில் திருவடி தீட்சை :**

பிறகு சுந்தரர் திருநாவலூரைத் தரிசித்துக் கொண்டு திருத்துறையூர் சென்று இறைவனை நோக்கித் தவநெறியருள வேண்டினர். அப்பர் சுவாமிகள் திருத்தொண்டு செய்த இடமாகிய திருவதிகையை மிதித்தற்கு அஞ்சி அதனருகில் சித்தவடம் மடத்தில் இரவு தங்கி நித்திரை செய்கையில் அதிகைப் பெருமான் கிழவேதியராய் அருகில் படுத்துத் திருவடி தீக்ஷை செய்தனர். பின்னர் சிதம்பரம் அடைந்து கூத்தப் பெருமான் குஞ்சித சரணம் கும்பிட்டார். பெருமான் கட்டளையின்படி திருவாரூர் செல்லும் வழியில் சீகாழியைக் குறுகினர். திருஞானசம்பந்தர் அவதாரமான தலமாதலால் அதனை மிதிக்க அஞ்சினர். ஊர்ப்புற எல்லையை

வலம் வந்தார். இறைவன் காதில் வெண்குழை யனுய்க் காட்சி நல்கியதைத் தரிசித்தார்.

**தம்பிரான் தோழரானுர் :**

பின்னர்ப் பல தலங்களைத் தரிசித்துத் திருவாரூர் சேர்ந்து வன்மீக நாதரைத் தரிசித்தார். அப் பெருமான், "உனக்கு நம்மைத் தோழனுகத் தந்தனம். நீ கொண்ட மணக் கோலத்துடன் எப் பொழுதும் இருப்பாயாக" என அருள் செய்தார். அன்றுமுதல் தம்பிரான் தோழராக, தியாகேசப் பெருமானைத் தரிசித்து வந்தார். அப்போது கயிலை யிலிருந்த கமலினி என்பார் அவ்வூர் உருத்திர கணிகையர் குலத்தில் பரவையார் என்ற பெயருடன் தோன்றி நாள்தோறும் தியாகேசப் பெருமானைத் தரிசித்து வந்தார். ஒருநாள் இருவரும் திருக்கோயி லில் சந்தித்து ஒருவரையொருவர்நேசித்தனர். இறை வன் திருவருளால் இருவருக்கும் மணம் நிகழ்ந்தது. பரவையாருடன் வாழ்ந்து வந்த சுந்தரர், தேவாசிரய மண்டபத்தில் சிவனடியார்கள் இருந்ததைக் கண்டு அவர்களுக்கு அடியனுகும் நாள் எந்நாளோ என எண்ணியவராய், சுவாமி தரிசனம் செய்தனர். இறைவன், "நீ நம்முடைய அடியவர்களைப் பாடுக" எனப் பணித்துத் 'தில்லைவாழ் அந்தணர்' என அடி யெடுத்துக் கொடுத்தனர். அதனையே முதலாகக் கொண்டு திருத்தொண்டத்தொகை பாடினுர். பின்னர்க் குண்டையூர்கிழார் என்னும் வேளாளர் அரிசி முதலிய பொருள் கொடுத்துத் தொண்டு செய்து வர, அது பஞ்சத்தால் தடைப்பட்டபோது கிழார் இறைவனைப் பிரார்த்தித்தார். குண்டையூர் முழுவதும் நெல் மலையாய் நிறைந்தது. இதனை அறிந்த சுந்தரர் அவற்றைத் திருவரூர் கொண்டு போக ஆளின்மையால் 'நீள நினைந்தடியேன்' என்ற திருப்பதிகம் பாடிப் பூதகணங்களால் நெல்மலை

திருவாரூர்வரப்பெற்றார். எல்லோரும் நெல் பெற்றனர்.

**பொன் பெற்றார் :**

பிறகு திருநாட்டியத்தான்குடியில் கோட்புலி நாயனார், தம் புதல்வியர்களான சிங்கடியாரையும், வனப்பகை யாரையும் மணம் செய்துகொள்ளுமாறு வேண்ட, அவ்விருவரையும் தம் புதல்வியர்களாக ஏற்றுப் போற்றினார். பிறகு பங்குனி உத்திரச் செலவுக்குப் பரவையார் பொன் வேண்டியதற் கிணங்கத் திருப்புகலூர் சென்றார். அங்குச் செங் கற்களைத் தலைக்கு வைத்து நித்திரை செய்தார். அவை பொன்னாக மாறின. அது கண்டு, "தம்மையே புகழ்ந்து" எனும் திருப்பதிகம் பாடித் திருவருளை வியந்தார். பின்பு பல தலங்களையும் தரிசித்துக் கொண்டு, திருப்பாண்டிக் கொடுமுடி சேர்ந்து, 'மற்றுப் பற்றெனக்கின்றி' என்னும் நமச்சிவாயத் திருப்பதிகம் பாடினார். பின்னர்த் திருமுது குன்றத் தில் பழமலைநாதர் அருளிய பன்னீராயிரம் பொன்னை மணிமுத்தா நதியில் இட்டுத் திருவாரூர்க் கமலாலயத்தில் பதிகம் பாடி எடுத்தார்.

**சங்கிலியார் திருமணம் :**

பிறகு திருக்குருகாவூர் வெள்ளடையில், களைப் புற்ற தமக்கு இறைவன் பொதி சோறு கொடுத்து மறைந்த அருட்டிறத்தைப் புகழ்ந்து பாடினார். பிறகு தொண்டை நாட்டுத் தலங்கள் பலவற்றைத் தரிசித் துத் திருவொற்றியூரை அடைந்தார். கயிலையில் இருந்த அநிந்திதை, ஒற்றியூரை அடுத்துள்ள ஞாயிறு என்ற ஊரில் ஞாயிறுகிழார் என்னும் வேளாளருக்கு, சங்கிலியார் என்ற பெயரோடு மகவாய்த் தோன்றி வளர்ந்து வந்தார். மணப் பருவம் உற்றும் ஒருவரையும் மணந்து கொள்ளாது இறைவனுக்குத் திருமாலை சாத்தும் தொண்டாற்றி வருகையில், சுந்தரர் அம்மாதினைக் கண்டு இச்சை



கொண்டு இறைவனிடம் அவரைத் தமது மனைவி யாக்கும்படி வேண்டினார். இறைவனும் இக் கருத்தைச் சங்கிலியாருக்குத் தெரிவித்து, அம்மை யாரின் விருப்பத்திற் கிணங்க மகிழமரத்தடியில், சுந்தரரைக் கொண்டு, "உம்மைப் பிரியேன்" என்று அவரிடம் சபதம் செய்யச் செய்து தொண்டர்களைக் கொண்டு அவர்கட்குத் திருமணம் நிகழ்த்துவித்தார்.

**கண்பெற்றார் :**

இவ்வண்ணம் சுந்தரர் இங்கு இருக்கும் நாளில், திருவாரூர் வசந்த விழா நினைவிற்கு வர, "எத்தனை நாள் பிரிந்திருக்கேன் என் ஆரூர் இறைவனையே" என்று பாடியவராய் ஒற்றியூரை விட்டகன்றார். சபதம் தவறினமையால் கண்ணொளி இழந்தார். திருவெண்பாக்கத்தில், 'திருக்கோயில் உள்ளீரோ' எனப் பாட, இறைவன் 'உளோம் போகீர்' என்று ஊன்றுகோல் கொடுத்து உதவினார். பின்னர்க் காஞ்சிபுரத்தில் கச்சி ஏகம்பனைக் காண இடக் கண் பெற்றார். வழியில் பல தலங்களையும் தரிசித்துக் கொண்டு திருவாரூர் சேர்ந்து 'மீளா அடிமை' என்ற பதிகம் பாடி வலக் கண்ணும் பெற்றார்.

**சேரமான் தோழர் :**

சங்கிலியாரை மணந்ததைக் கேள்வியுற்ற பரவையார் ஊடல் கொள்ள, தியாகேசப் பெருமான் இருமுறை தூது சென்று ஊடலைப்போக்கினார். இந்நிகழ்ச்சியைத் தவறு எனக் கருதிய ஏயர்கோன் கலிக்காம நாயனாருக்கு இறைவன் சூலை நோய் கொடுத்து அதைத் தீர்க்கு முகத்தால் சுந்தரருடன் நட்புக்கொள்ளச் செய்தார். சேரநாட்டு மன்னரான சேரமான் பெருமாள் நாயனார், சுந்தரருக்கு நட்பினரானதால் சேரமான் தோழரெனவும் சுந்தரர் அழைக்கப் பெற்றார். அதுமுதல் இருவரும் பல தலங்களையும் தரிசித்துக் கொண்டு வெள்ளம் பெருகிய காவிரி வழிவிட, திருவையாற்றுப் பெரு

மானைத் தரிசித்தனர். பிறகு சேரமான் நாட்டில் சில காலம் தங்கினார். திருவஞ்சைக்களத்தப்பனை வழிபட்டார். திருவாரூர்த் தியாகேசப் பெருமானைத் தரிசிக்க விரும்பினார்; சேரமான்பெருமாள்கொடுத்த பொருள்களைத் திருவாரூருக்கு எடுத்துச் சென்றார்; செல்லும் வழியில் திருமுருகன்பூண்டியில் பூத கணங்களாகிய வேடர்கள் பொருள்களைக் கவர்ந்தமை கண்டு அவ்வூர்ப் பெருமானை 'எத்துக்கு இங்கிருந்தீர்' எனப் பாடிப் பொருளை மீண்டும் பெற்றுத் திருவாரூர் சேர்ந்தார்.

**கயிலை மேவினார் :**

சில நாள் கழித்துச் சேரமான் நாட்டிற்குச் செல்ல விரும்பினார். வழியில் கொங்குநாட்டுத் தலங்கள் சிலவற்றைத் தரிசித்துத் திருப்புக் கொளியூர் அவிநாசியில் முதலையுண்ட பாலனைப் பெற்றோர் மகிழ மீட்டுக் கொடுத்தார். பின்பு சேர நாடு அடைந்து சேரமான் பெருமாளுடன் வதிந்தார்; இப்படி இருக்கும் நாளில் ஒரு நாள் திருவஞ்சைக்களம் சென்றார். உலக வாழ்வினின்றும் விடுபட விரும்புவதை விடையேறும் வித்தகனிடம் விண்ணப்பித்தார். விண்ணவர் பெருமானும் விருப்பத்தை நிறைவேற்ற வெள்ளை யானையைத் தேவர்களுடன் அனுப்பினார். ஆடிச் சுவாதி நன்னாளில் வெள்ளை யானையின்மீது இவர்ந்து சேரமான் பெருமானை நினைந்த வண்ணம் சுந்தரர் கயிலை சேர்ந்தார். இதனை யுணர்ந்த சேரமான் பெருமாள் குதிரையின் செவியில் ஐந்தெழுத்தோதிச் சுந்தரரைப் பின்தொடர்ந்து திருக்கயிலை மேவினார். பரவையாரும், சங்கிலியாரும் முன் போலவே கமலினி, அநிந்திதையாகக் கயிலை சேர்ந்தனர். சுந்தரர் அருளியதிருப்பதிகங்கள் 100 இவை ஏழாந் திருமுறையாக இலங்குகின்றன.

---

உ

குருபாதம்

# 4. மாணிக்கவாசகர் வரலாறு

"தேனூறும் வாசகங்கள் அறுநூறும் திருக்கோவை
நானூறும் அமுதூற மொழிந்தருளும் நாயகனை
வானூறும் கங்கை நிகர் மாணிக்கவாசகனை
யான்ஊறு படாதவகை இருபோதும் இறைஞ்சிடுவேன்."

**அவதாரம் :**

மாணிக்கவாசகர் என வழங்கும் திருவாதவூரர் தென்பாண்டி நாட்டிலே வாயுவினால் பூசிக்கப் பெற்ற திருவாத ஊரிலே, அமாத்தியப் பிராமண குலத்திலே, (பரம்பரையாக அமைச்சர் தொழில் புரிந்த பிராமண குலம்) கி. பி. மூன்றாம் நூற்றாண்டில், சம்புபாதசாரியாருக்கும் சிவஞானவதி அம்மைக்கும் மகவாய்த் தோன்றினார். 16-ஆண்டிற்குள் பல கலைகளிலும் வல்லவரானார். கற்றவண்ணம் நிற்கும் ஒழுக்கம் மிக்கவராய் விளங்கினார். சிவபெருமானிடத்தும் சிவனடியாரிடத்தும் மிக்க அன்புடையவராய் வாழ்ந்து வந்தார்.

**முதல் அமைச்சராயினார் :**

இவரது பெருமையைக் கேட்டுணர்ந்த அரிமர்த்தன பாண்டிய மன்னன் இவரை உபசாரத்துடன் தன் அரண்மனைக்கு வரவழைத்தான். தனது அரசவைக்கு முதலமைச்சராக்கிக் கொண்டான்.




மாணிக்கவாசகர்

சில நாட்களில் அவரது திறமையை உணர்ந்த மன்னன் "தென்னவன் பிரமாயன்" என்ற பட்டம் வழங்கிச் சிறப்பித்தான். நாட்டு மக்கள் நலமெலாம் பெற அரசாட்சியை நீதிநெறி வழுவாமல் நடத்தி வந்தார். குடிமக்களைக் "கண்ணும் ஆவியும் ஆம்" எனக் காத்துவந்தார். இப்படியிருக்கும் நாளில் "நான் யார்? என் உள்ளம் யார்? ஞானங்கள் யார் என்னைப் படைத்தவன் யார்? எனக்கும் அவனுக்கும் உள்ள தொடர்பு யாது? எங்கிருந்து வந்தேன்? எதற்காக வந்தேன்? எங்குப் போகப் போகிறேன்" என்ற ஆத்ம விசாரணையில் ஈடுபட்டார். நிலையாத இவ்வுலக வாழ்வைவிட்டு நிலையுடைய பேரின்பப் பெருவாழ்வு பெற விரும்பினார். வாழ்வும் பதவியும் அவருக்குச் சுமையாகத் தோன்றின. சுமையகற்றி உண்மை உணர்த்தும் ஞானசாரியனை நாடி நின்றார்.

**குதிரை கொள்ளாது குருவினைக் கொண்டார் :**

இந்நிலையில், அரசாங்கத்தில் குதிரைப்படை வளமில்லாதிருப்பது கண்ட அரசன் சோணாட்டுக் கடற்கரையில் நல்ல குதிரைகள் வந்து இறங்கியிருப்பதைத் தூதுவர் வாயிலாக அறிந்து முதலமைச்சராகிய இவரை அங்குச் சென்று நல்ல குதிரைகளை வாங்கிவருமாறு பணித்து வேண்டிய பொருளையும் கொடுத்தனுப்பினான். ஏவலர்களுடன் புறப்பட்ட வாதவூரர், மீனாட்சியம்மையையும் சொக்கலிங்கப் பெருமானையும் வணங்கி இவ்வரச காரியம் யாதோரிடையூறுமின்றி நிறைவேற வேண்டுமென்று பிரார்த்தித்துக்கொண்டு சோணாட்டுக்கடற்கரையை நோக்கிச் சென்றார். 'ஆவுடையார் கோயில்' என வழங்கும் திருப்பெருந்துறையைக் குறுகினார்; தன்மீதுள்ள சுமையெலாம் குறைந்ததைப்போல் உணர்ந்தார். திருக்கோயிலை வலம் வந்தார். சிவபெருமான் இவரை ஆட்கொள்ள

வேண்டி தட்சிணாமூர்த்திக் கோலங்கொண்டு குருந்த மரத்தின் அடியில் வீற்றிருந்தார். தென்முகப் பரமனைக் கண்ட வாதவூரர் காந்தங்கண்ட இரும்பே போல் ஈர்க்கப் பெற்றார். தன் வசமிழந்து பரவசமுற்றார். பெருமான் குருநாதனாக இருந்து வாதவூரருக்கு உண்மைப் பொருளை உபதேசித்தார். அடிகள் பாச அறிவும், பசு அறிவும், நீங்கப் பெற்றுப் பதி அறிவில் தலைப்பட்டார். ஆண்டவன் உபதேசித்த உண்மைகளைச் செந்தமிழ்ப் பாடல்கள் வாயிலாக வெளியிட்டார். மாணிக்கமெனத் திகழ்ந்த வாசகத்தைக் கேட்ட பெருமான் அசரீரியாக "மாணிக்க வாசக" என அழைத்தார். அதுமுதல் வாதவூரர் மாணிக்கவாசகராயினார்.

**நரி பரியானது:**

உலகியலை மறந்து நின்ற மாணிக்கவாசகர் பெருந்துறைப் பெருமானுக்குத் திருக்கோயில் எடுக்க எண்ணினார். குதிரை வாங்கக்கொணர்ந்த பொருளையெல்லாம் கோயில் கட்டும் திருப்பணிக்குச் செலவிட்டார். இவர் தன்னிலை மறந்து சிவப் பணியில் ஈடுபட்டமையைக் கண்ட ஏவலர்கள் இவரது செயலைப்பற்றிப் பாண்டி மன்னனிடம் அறிவித்தனர். மன்னன் மாணிக்கவாசகருக்குக் குதிரையுடன் வருமாறு ஓலை போக்கினான். அது கண்ட அடிகள் பெருமானிடத்தில் இதற்கு யாது செய்வேன் என விண்ணப்பித்தார். "ஆவணி மூலத்தன்று குதிரைகளை அனுப்புவோம்" எனப் பெருமான் அசரீரியாக அருள் பாலித்தார். அசரீரி கேட்ட அடிகள் ஆவணி மூலத்தன்று குதிரைகள் வரும் என மன்னனுக்கு மறு ஓலை போக்கினார். ஆவணி மூலத்திற்கு முன்னாள்வரை குதிரைகள் வராமைகண்ட அரசன் மணிவாசகரை வரவழைத்து மிக்க சினங்கொண்டு தண்டிக்கச் செய்தான். அடி

யவர் துயரம் பொருத ஆண்டவன் நந்திதேவரை அழைத்துக் காட்டிலுள்ள நரிகளை எல்லாம் பரிகளாக மாற்றச் செய்தார். வேதமாகிய குதிரைமீது தான் அமர்ந்து குதிரைப் படைகளை ஆவணி மூலத்தன்று மதுரைக்குக் கொண்டு சென்றார். இது கண்ட பாண்டி மன்னன் மணிவாசகரைப் போற்றிப் புகழ்ந்தான்.

**பரி நரியானது :**

சுந்தரேசப்பெருமான் குதிரைகளின் இலக்கணங்களை மன்னனுக்கு விளக்கிக் கயிறுமாறிக் கொடுத்து அவைகளை மன்னனிடம் ஒப்புவித்தார். அன்றிரவு, குதிரைகளாக மாறிவந்த நரிகள் சுய உருவம் பெற்று இன்னல்கள் பல விளைத்தன. இச் செய்தி கேட்ட மன்னன் மிக்க கோபங் கொண்டு மணிவாசகரை வைகைச் சுடு மணலில் நிறுத்தித் தண்டிக்கச் செய்தான்.

**வைகையில் வெள்ளமும் வந்தியம்மையும் :**

மாணிக்கவாசகர் "நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே" என இறைவனிடம் முறையிட்டார். தொண்டர் துயர் பொருத சுந்தரேசர், வைகையில் வெள்ளம் பெருகச் செய்தார். வெள்ளங் கண்டு பயந்த மன்னன் வீட்டிற்கு ஒருவராக வந்து வைகைக் கரையை அடைக்குமாறு கட்டளையிட்டான். குடிமக்களுள், பக்தி நிறைந்த-வயது முதிர்ந்த 'வந்தி' அம்மைக்கு ஆள் இன்மையால், பக்தி வலையிற் படுவோனாகிய பரமனே கூலியாளாக வந்து பிட்டுக்கு மண் சுமந்து கரையடைக்கச் சென்றார். ஆனால் கரையடைக்கவில்லை. கரையடைக்கும் மற்ற ஏவலர்களையும் அடைக்கவொட்டாமல் திருவிளையாடல்கள் பல புரிந்தார். வந்தி அம்மையின் பங்குமட்டும் அடை

படாமல் இருந்ததைக் கண்ட அரசன் வெகுண்டு கூலியாளாக வந்த பரம்பொருளைப் பிரம்பால் அடித்தான்: அவ்வடி அனைவர் மேலும் பட்டது. ஆண்டவன் மறைந்தான். கரையும் அடைபட்டது. "இத் திருவிளையாடல் மாணிக்கவாசகரின் பொருட்டு நிகழ்ந்தது" என அசரீரி எழுந்தது. அவ்வசரீரி கேட்ட மன்னன் பிழை பொறுக்க வேண்டினன். மன்னிப்புக்கோரி மாணிக்கவாசகரிடம் மண்டியிட்டான். மாணிக்கவாசகரும் பிழை பொறுத்துப் பெருங் கருணை பாலித்தார்.

**ஊமைப்பெண் பேசியது :**

இறைவன் ஆணைப்படி மணிவாசகர் பல தலங்களையும் தரிசித்துக்கொண்டு சிதம்பரம் என வழங்கும் தில்லை நகர் அடைந்து சிற்சபேசனைத் தரிசித்தார். அவ்வமயம், ஈழ நாட்டு அரசன் ஒருவன் தனது ஊமைப் பெண்ணையும், பல பௌத்தர்களையும் அழைத்துக்கொண்டு தில்லை வந்து சேர்ந்தான். கூத்தப் பெருமான் குஞ்சித நீழலில் குடிகொண்டிருந்த மணிவாசகரிடம் பௌத்த சமயமே உயர்ந்ததென வாதமிட்டான். மணிவாசகரும் திருவருளைப் போற்றி ஈழ அரசனது ஊமைப் பெண்ணைக்கொண்டே திருச்சாழல் பதிகத்தால் சைவ சமயமே உயர்ந்தது என்பதை நிலை நிறுத்தினர். அரசனும் உடன் வந்த பௌத்தர்களும் உண்மை உணர்ந்து சைவராயினர். பின்னர், திருவண்ணமலை முதலிய பல தலங்களையும் தரிசித்துத் திருவாசகம் அருளிச் செய்து மீண்டும் தில்லைநகர் அடைந்து நடராஜப் பெருமானை நாளும் தொழுது வந்தார்.

**சிற்றம்பலத்தில் திருவாசகம் :**

இப்படியிருக்கும் நாளில் ஒருநாள், தில்லைக் கூத்தன் அந்தணர் கோலங்கொண்டுமணிவாசகரிடம்

சென்று பல தலங்களிலும் பாடியுள்ள திருவாசகப் பாடல்களை 'நமச்சிவாய வாழ்க' என்பது முதலாக ஓதச் செய்து தமது ஓலைச் சுவடியில் அவற்றை எழுதிக் கொண்டார். பாவை பாடிய மணிவாசகரைக்கோவை யும் பாடச் செய்து அதனையும் சுவடியில் எழுதி "மணி வாசகன் சொல்லச் சிற்றம்பலத்தான் கையெழுத்து" எனக் கையொப்பமிட்டுச் சுவடியுடன் மறைந்தார். மறைந்தவர் கூத்தப்பெருமானே என அறிந்த மணி வாசகர் பெருமானின் பெருங்கருணைத் திறத்தை வியந்து போற்றினர். மறைந்த இறைவன் சுவடியைச் சிற்சபை யிலுள்ள பஞ்சாட்சரப்படியில் வைத்தார். மறுநாட் காலையில், பஞ்சாட்சரப்படியில் சுவடியைக் கண்ட தில்லைவாழ் அந்தணர்கள் அதிசயித்தனர். சுவடியின் முடிவில், நடராஜப்பெருமான் கையொப்பம் இருக்கக் கண்டு வியப்புற்றனர். மாணிக்கவாசகரிடம் சார்ந்தனர்; சுவடியின் விபரம் அறிவித்தனர். அதில் உள்ள பாடல் களுக்குப் பொருள் உரைக்க வேண்டினர். தாம் சிவப் பேற்றிற்கு உரியராய் இருப்பதை உணர்ந்த மணிவாசகர் தில்லைவாழ் அந்தணர்களுடன் சிற்சபேசன் கோயிலைக் குறுகினர். இத்திருவாசகத்திற்கு வாச்சியம் (பொருள்) கூத்தப் பெருமானின் குஞ்சித சரணமே எனக்காட்டி அச்சரண ஒளியிலே தாமும் இரண்டறக் கலந்தார். அந்நாளே ஆனி மக நன்னாளாகும். மணிவாசகரை வழிபட்டுத் திருவாசகம் ஓதிச் சிறப்புறுவோமாக.

**பெருந்துறை புகுந்து பேரின்ப வெள்ளம்**
**மூழ்கிய புனிதன் மொழிந்த வாசகமே**
**வாசகம் அதற்கு வாச்சியம்**
**தூசகல் அல்குல்வேய்த் தோளிடத் தவனே, -சிவப்பிரகாசர்.**

உ

குருபாதம்

# திருமுறை விளக்கம்

ஆசையறாய் பாசம்விடாய் ஆனசிவ பூசைபண்ணாய்
நேசமுடன் ஐந்தெழுத்தை நீநினையாய் – சீ சீ
சினமே தவிராய் திருமுறைகள் ஓதாய்
மனமே உனக்கென்ன வாய்.

—ஸ்ரீ குருஞானசம்பந்தர்.

## திருமுறை என்ற சொல்லின் பொருள் :

பாடுவோரையும், பாடக் கேட்போரையும் இறையுணர்வில் விரைவில் ஈடுபடச் செய்யும் ஆற்றல் தோத்திரப் பாடல்களுக்கு உண்டு. அத்தகைய பாடல்களை மிகுதியாகக்கொண்டு விளங்குவது நம் தமிழ் மொழியேயாகும். இது எம்மொழிக்கும் இல்லாத் தனிச் சிறப்பாகும். தமிழ்த் தோத்திரங்களுள் தலை சிறந்து விளங்குவன திருமுறைகள். திரு என்ற சொல் உபசாரமாக உலகியல் செல்வங்களைக் குறித்தபோதிலும், உண்மையில் சிவத்தோடு இணைபிரியா திருக்கின்ற அருளாகிய சக்தியையும், அச்சிவசக்தியின் துணையால் உயிர்கள் அடையும் பேரின்பத்தையுமே குறிக்கும். "சென்றடையாத திருவுடையானை" என்றவிடத்துத் திரு என்னும் சொல் அருளாகிய சிவசக்தியைக் குறிப்பதும், "போகமும் திருவும் புணர்ப்பானை" என்றவிடத்துத் திரு என்னும் சொல் பேரின்பத்தைக் குறிப்பதும் கொண்டு இக் கருத்தை நன்கு தெளியலாம். முறை என்ற சொல் பல பொருள் குறிக்கும் ஒரு சொல்லாயினும், இங்கு மனக் கோணலை நீக்கி வாழ்க்கை முறையை ஒழுங்கு படுத்தும்

நூலையே குறிக்கும். "இறை நிலம் எழுதுமுன் இளைய பாலகன், முறை வரைவேன் என முயல்வதொக்கும்" என்ற கந்தபுராண அவையடக்கச் செய்யுளால் இக் கருத்து நன்கு புலனாகும்.

## தொகைச் சிறப்பு :

இத் திருமுறைகள் பன்னிரண்டாகப் பகுக்கப் பெற்றுள்ளன. இவற்றை அருளிச் செய்தவர்கள் திருஞான சம்பந்தர் முதல் சேக்கிழார் பெருமான் முடிய உள்ள இருபத்தேழு அருளாசிரியர்களாவார்கள். திருமுறைகளின் எண்ணிக்கையிலும், ஆசிரியர்களின் எண்ணிக்கையிலும் இங்கு ஒரு தனிச் சிறப்பைக் காணலாம். வான வெளியை நம் அறிவில் அளவிட்டு உணர்தற்கு இருபத்தேழு நக்ஷத்திரங்கள் துணை செய்கின்றன. அது போல இறைவனது பேரருள் வெளியின் இயல்பினை நம் மனதிற்கொண்டு உணர்தற்குத் துணைபுரிந்தருளும் திருமுறை ஆசிரியர்களும் இருபத்தெழுவராய் இலங்குகின்றனர். மேலும் இவ்விருபத்தேழு நக்ஷத்திரங்களைத்தான் பன்னிரண்டு வீடுகளாகப் (இராசிகளாக) பிரித்து உணர்ந்து கால தத்துவத்தின் நுண்ணிய ஆற்றலை உணர்கின்றோம். அது போலவே இவ்வாசிரியர்களின் அருள் வாக்குகளையே பன்னிரண்டு திருமுறைகளாகப் பகுத்துணர்த்து காலகாலனாகிய முதல்வனது பேரருட்டிறத்தினை உணர்ந்து பயன் கொள்ளுகின்றோம். புற இருளைப்போக்கிப் பொருள்களைக் காட்டும் சூரியர் பன்னிருவராதல்போல, அக இருளை அகற்றிச் சீவான்மாக்கள் பரமான்மாவை உணர்ந்து இன்புறத் துணைபுரியும் திருமுறையும் பன்னிரண்டாய் இலங்குகின்றது.

## தேவாரம் — அடங்கல் முறை :

பன்னிருதிருமுறைகளுள் முதல் மூன்று திருமுறைகள் 384 பதிகங்களாக 4181 பாடல்களாக அமைந்துள்ளன.

இவற்றை அருளிச்செய்தவர் திருஞானசம்பந்த சுவாமிகளாவர். அடுத்துள்ள 4, 5, 6, திருமுறைகள் 313 பதிகங்களாக 3066 பாடல்களாக அமைந்துள்ளன. இவற்றை அருளிச்செய்தவர் திருநாவுக்கரசு சுவாமிகளாவர். ஏழாவது திருமுறை 100 பதிகங்களாக 1026 பாடல்களாக அமைந்துள்ளது. இதனை அருளிச் செய்தவர் சுந்தரமூர்த்தி சுவாமிகளாவர். இவ்வேழு திருமுறைகளும் தேவாரம் எனவும், அடங்கல்முறை எனவும் வழங்கப்பெறும். தே என்பது தெய்வத்தையும், வாரம் என்பது அன்பையும் குறிக்கும். எனவே தெய்வத்தினிடத்து உயிர்கட்கு அன்பை விளைவிக்கும் இவ்வருட் பாடல்கள் தேவாரம் எனப்பெற்றன. மேலும் வாரம் என்பதை ஆரம் எனப்பிரித்து, தெய்வத்திற்கு அணிவிக்கும் மாலை போல்வது என்றும் பொருள் கொள்ளலாம். வாரம்-என்ற சொல்லிற்கு உரிமை என்ற பொருளும் உண்டாகலின், சிவ முதலாகிய தெய்வத்திற்கே உரிய பொருள் சேர் புகழைப்பாடும் பாடல்கள் என்பதும் கொள்க. மனம் அடங்கக் கல்லார்க்கு வாய் ஏன்? என்றார் தாயுமானார். உலகியற் கல்வி வாயையும், மனத்தையும் அடங்காமையை உண்டாக்கும் இயல்புடையது. இத்திருமுறைக் கல்வி, நம்மை வெள்ளம் அடங்கும் விரிசடையார்க்கு ஆளாக்கி உள்ளத்தை அடங்குமாறு செய்யும் உயர்வுடையது. இச் சிறப்பினால்தான் கற்றறிந்து அடங்குவதே முறை என்பதைத் தெளிய உணர்த்தும் இத்திருமுறைகள், அடங்கல் முறை என வழங்கலாயின என்றும் கூறலாம்.

## ஏனைய திருமுறைகள் :

எட்டாந்திருமுறை, திருவாசகம், திருக்கோவையார் என இருபிரிவாக அமைந்துள்ளது. அவற்றுள் திருவாசகம் 51 பகுதிகளாகவும், 656பாடல்களாகவும் அமைந்துள்ளது. திருக்கோவையார் 400 பாடல்கள் கொண்டிலங்குவது. இத்

திருமுறையை அருளிச்செய்தவர் மாணிக்கவாசக சுவாமி களாவர். எட்டாந் திருமுறை வரை அருளிச் செய்த ஆசிரியர் நால்வரும் சமயாசாரியர் எனப் பெறுவர். ஒன்பதாந் திருமுறை திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என இரு பிரிவாக அமைந்து விளங்குகின்றது. அவற்றுள் திரு இசைப்பா 28 பதிகங்களாகவும், 288 பாடல்களாகவும் இலங்குகிறது. திருப்பல்லாண்டு ஒரு பதிகமாகவும் 13 பாடல்களாகவும் அமைந்துள்ளது. இத்திருமுறையினை அருளிச் செய்த ஆசிரியர்கள் திருமாளிகைத்தேவர், சேந்தனூர், கருவூர்த்தேவர், பூந்துருத்திநம்பி காடநம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதனூர், புருடோத்தம நம்பி, சேதிராயர், ஆகிய ஒன்பதின்மராவர். இவர்களுள் சேந்தனூர் என்பவரே "பல்லாண்டும்" அருளிச் செய்தவராவர்.

பத்தாந்திருமுறை இருபத்தெட்டு ஆகமங்களின் சாரம். 9 தந்திரங்களாகத் திருமூலரால் அருளிச் செய்யப் பெற்றதாகும். இது மூவாயிரம் பாடல்களைக் கொண்டிலங்குவது. ஆனல் இப்பொழுது 3047 பாடல்கள் காணப்படுகின்றன. பதினொராந் திருமுறை 40 பிரபந்தங்களாகவும், 1416 பாடல்களாகவும் அமைந்து விளங்குவது. இதனை அருளிச் செய்தவர்கள் திருவாலவாயுடையார், (சிவபெருமான்) காரைக்காலம்மையார், ஐயடிகள் காடவர்கோன் நாயனூர், சேரமான் பெருமாள் நாயனூர், நக்கீர தேவ நாயனூர் கல்லாட தேவ நாயனூர், கபில தேவ நாயனூர், பரண தேவ நாயனூர், இளம்பெருமான் அடிகள், அதிராவடிகள், பட்டினத்துப்பிள்ளையார், நம்பியாண்டார் நம்பிகள் ஆகிய பன்னிரண்டு அருளாசிரியர்களாவார்கள். பன்னிரண்டாந் திருமுறை சேக்கிழார் சுவாமிகளால் அருளிச்செய்யப் பெற்றது. இது 2 காண்டங்களாகவும், 13 சருக்கங்களாகவும், 4286 செய்யுட்களாகவும் அமைந்து 63 தனியடியார்களின் பெருமையையும், 9 தொகையடியார்களின் சிறப்பையும் உள்ளவாறு உணர்த்துவது.

## திருமுறை ஆசிரியர்களின் காலம் :

திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் கி. பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்கள். சுந்தரர் 8ம் நூற்றாண்டின் இறுதியிலும் 9ம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் வாழ்ந்தவர். மாணிக்கவாசகர் கி. பி. மூன்றும் நூற்றாண்டில் வாழ்ந்தவர் எனத் தெரிகிறது. திருவிசைப்பா ஆசிரியர்களான ஒன்பதின்மரும் ஏறத்தாழ கி. பி. 9ம் நூற்றாண்டு முதல் 11ம் நூற்றாண்டு வரையுள்ள காலத்தில் வாழ்ந்தவர்களாகத் தெரிகின்றனர் திருமூலர் காலம் கி. மு. 6000ம் என்பர். பதினோராந் திருமுறையை அருளிச்செய்த பன்னிரு ஆசிரியர்களும் கி. பி. 2ம் நூற்றாண்டு முதல் பத்தாம் நூற்றாண்டு வரையுள்ள காலத்தினர் என அறியப்படுகின்றது. சேக்கிழார் பெருமான் பன்னிரண்டாம் நூற்றாண்டினராவர்.

## வகுத்தோர் காலம் ;

முதல் இராஜராஜன் 9ம் நூற்றாண்டின் இறுதியிலும் 10ம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் வாழ்ந்தவன். இவன் அடியவர்கள் மூலம் சில தேவாரப்பாடல்களைக் கேட்டு அவற்றின் சிறப்பை உணர்ந்து அவை உயிர்கள் உய்தி பெறச் சிறந்த சாதனமாகும் எண்ணெண்ணி முழுவதையும் தேடினான். நம்பியாண்டார் நம்பிகள் வாயிலாகத் திருநாரையூர்ப் பொல்லாப்பிள்ளையார் மூலம் சிதம்பரம் கனகசபையின் பின்பக்கத்தில் மூவர் திருக்கர அடையாளம் உள்ள அறையில் இருப்பதை அறிந்தான். கூத்தப்பெருமான் திருவருளால் தேவார ஏடுகளைக் கண்டான். பலவற்றைச் செல்லரித்தமை கண்டு வருந்தினான். “ இக்காலத்திற்கு வேண்டுவன வைத்து மற்றவற்றை மறைத்தோம் ” என்ற அசரீரி வாக்கினால் தெளிந்தான். நம்பியாண்டார் நம்பிகளைக் கொண்டு திருவாசகத்தையும், திருக்கோவையாரையும், எட்டாந் திருமுறையாகவும், ஒன்பதின்மர்

அருளிய திருவிசைப்பாவையும், திருப்பல்லாண்டையும் ஒன்பதாந் திருமுறையாகவும், திருமூலர் அருளிய திருமந்திரத்தைப் பத்தாந்திருமுறையாகவும், பன்னிரு ஆசாரியர்கள் அருளிய நாற்பது பிரபந்தங்களையும் பதினோராந் திருமுறையாகவும் அமைத்தான். பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவன் அநபாயன் என்னும் இரண்டாம் குலோத்துங்கன். அவனைப் புறச்சமய அபாயத்தினின்றும் நீங்குவதற்காகச் சேக்கிழார் பெருமானால் அருளிச் செய்யப்பட்டதே திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணம். இதன் பெருமையறிந்த அநபாயன் இதனைப் பன்னிரண்டாம் திருமுறையாக அமைக்கச் செய்தான்.

## ஓதுவார் உறுபயன் :

உணவு உடம்பினை வளர்ப்பதுபோல உயிரை (ஆன்மீக உணர்வை) இத்திருமுறைப் பாடல்கள் வளர்க்க வல்லன. அவை இம்மை, மறுமை நலங்களை அளித்து வீடுபேற்றையும் அளிப்பன. ஆயிரம் ஆண்டுகட்கு முன் வாழ்ந்த மக்கள் வாழ்க்கையையும், அவர்தம் மாண்பையும் உள்ளவாறு உணர்த்துவன. வேண்டுவார் வேண்டுவனவற்றை விரைந்து அளிப்பன. இடர் நீங்க வேண்டின் " மறையுடையாய் " என்ற பதிகத்தையும், விஷ ஜுரம் நீங்க வேண்டின் " அவ்வினைக்கிவ்வினையாம் " என்ற பதிகத்தையும், பொருள் வேண்டின். " இடரினும் தளரினும் " என்ற பதிகத்தையும், திருமணம் விரும்புவோர் " சடையாய் எனுமால் " என்ற பதிகத்தையும், விஷம் நீங்க வேண்டின் " ஒன்று கொலாமவர் " என்ற பதிகத்தையும் நெல் வேண்டுவோர் " நீள நினைந்தடியேன் " என்ற பதிகத்தையும், நாள்தோறும் பாராயணம் செய்து பயனடைவார்களாக. எல்லா நலங்களும் வேண்டுவோர் ஆண்டிற்கொருமுறை பன்னிருதிருமுறைகளையும் முழுவதும் நியதியாகப் பாராயணம் செய்வார்களாக. குழந்தைகளைத் திருமுறைப் பயிற்சியில் சேர்த்துச் சிறப்பெய்துவார்களாக.

உ
குருபாதம்

# சேக்கிழார் நாயனர் வரலாறு

'தெய்வம் மணக்கும் செய்யுளெல்லாம்' எனப் போற்றப் பெற்ற சிறப்புமிக்கது திருத்தொண்டர் புராணமாகிய பெரிய புராணம். இவ்வருள் நூலை இயற்றியுதவிய பெரியார் அருண்மொழித்தேவர் என்னும் பெயரையுடைய சேக்கிழார் நாயனுராவார். சைவசமய சந்தானுசாரியருள் ஒருவராகிய கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியார் சேக்கிழார் வரலாற்றை விரித்துத் திருத்தொண்டர் புராண வரலாறு எனப் பெயரிய சேக்கிழார் புராணத்தை இயற்றியருளினுர் என்பர். நூற்று மூன்று பாடல்களால் இயன்ற இந்நூல் வழியில் சேக்கிழார் நாயனர் வரலாற்றைச் சுருங்க நோக்குவோம்.

'தொண்டைநாடு சான்றோருடைத்து' என்பது முதுமொழி. தொண்டை நாட்டின் 24 கோட்டங்களுள் ஒன்று புலியூர்க்கோட்டம். அக்கோட்டத்தைச் சார்ந்த குன்றவள நாட்டின் தலைநகர் குன்றத்தூர். இவ்வூரில் வேளாளர் மரபில் சேக்கிழார் குடியில் அருண்மொழித்தேவர், பாலறுவாயர் என்னும் இருவரும் சகோதரராய்ப் பிறந்து வளர்ந்து கல்வி, கேள்விகளில் சிறப்புற்றனர். அருண்மொழித்தேவரின் கல்வி அறிவு ஒழுக்கங்களை உணர்ந்த சோழ மன்னன் அவரைத் தன் அரசியலில் அமைச்சராக நியமித்து 'உத்தம சோழப் பல்லவன்' என்ற பட்டத்தையும் தந்து சிறப்பித்தான். அமைச்சுரிமை பூண்டு சோழநாட்டில் தங்கிய அருண்மொழித்தேவர் அந்நாட்டுத் திருத்தலங்களுள் ஒன்ருகிய திருநாகேச்சுரத்திறைவர்பால் பேரன்பு பூண்டு அதே அமைப்பில் தம்முடைய ஊராகிய குன்றத்தூரிலும் திருநாகேச்சுரம் என்ற பெயரால் ஒரு திருக்

கோயில் அமைத்து வழிபாடும், திருவிழாவும் நடைபெற ஏற்பாடு செய்தார்.

அந்நாளில் சோழ மன்னன் சைவசமய நூல்களின் பெருமை உணராது, சீவகசிந்தாமணிக் கதையை மெய் யென நம்பி மனமகிழ்ந்து பாராட்டிக் கேட்பானாயினன். இதுகண்ட அருண்மொழித்தேவர், 'வேந்தே! நீவிர் சைவ சமயத்தினராயிருந்தும் இம்மை, மறுமை, வீடு என்னும் மும்மை நலன்களையும் தரும் சிவனடியார்களின் மெய்ம்மை வரலாறுகளைக் கேளாது, நமது முழுமுதற் பொருளாகிய சிவபெருமானை நிந்திக்கும் புறச்சமயத்தவர்களாகிய சமணர் களுடைய புனைகதையான இதனைப் பாராட்டிக் கேட்பது தகுதியன்று' என அறிவுறுத்தினர்.

இதனைக்கேட்ட சோழமன்னன், 'நீவிர் சொல்லிய சிவ கதையாது? அதன் வரலாறு என்னை? அதனை விளங்கச் சொல்வீராக!" என வினவினன். அருண்மொழித்தேவர், திருவாரூர் இறைவன் அருளால் 'தில்லைவாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்" என அடியெடுத்துக்கொடுக் கச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய திருத்தொண்டத் தொகையென்னும் சைவ அடியார்களின் பெருமையை விரித்துரைக்கும் திருப்பதிகத்தையும், திரு நாரையூர்ப் பொல்லாப்பிள்ளையார் அருள் பெற்று நம்பி யாண்டார் நம்பிகள் வருத்துரைத்த திருத்தொண்டர் திரு வந்தாதி என்ற நூற் பொருளையும் மன்னனுக்கு விளங்க எடுத்துரைத்தார்.

சிவனடியார்களின் உண்மை வரலாறுகளைக் கேட்டு உளமுருகிய சோழமன்னன், 'திருத்தொண்டர் வரலாறு களை யாவரும் தெளிவாய் அறிந்துகொள்ளும்படி சுவை மிக்க செந்தமிழ்ப் பெருங்காப்பியமாகப் பாடி உதவுதல் வேண்டும்' எனத் தன் அமைச்சரை வேண்டிப் பெரும்

பொருளையும் வழங்கினான். அருண்மொழித்தேவரும் தில்லையை அடைந்து, சிவகங்கையில் நீராடி, அம்பலவாணனைத் தொழுது போற்றி, "பெருமானே நின்பால் அன்பு மிக்க அடியார்களின் வரலாறுகளைப் பெருங்காப்பியமாக அடியேன் விரித்துப் பாடுதற்கு அடியெடுத்துக் கொடுத்தருளல் வேண்டும்' என உளங்கசிந்து வேண்டிநின்றார். அந்நிலையில் அங்குள்ள அனைவரும் கேட்கத் தில்லையம்பலவன் திருவருளால் 'உலகெலாம்' என்றொரு வானொலி எழுந்தது. தில்லைவாழ் அந்தணர்கள் கூத்தப்பெருமானுக்குச் சாத்திய திருநீற்றையும், திருமாலையையும், திருப்பரிவட்டத்தையும் அருண்மொழித் தேவருக்குச் சாத்தினர். அருண்மொழி தேவரும் திருநெறித் தலைவர்களாகிய தேவார மூவர்களையும் வணங்கிப் போற்றிச் சிவசின்னங்கள் அணிந்து ஆயிரக்கால் மண்டபத்தில் அமர்ந்திருந்து, இறைவன் அருளிய 'உலகெலாம்' என்ற சொல்லையே முதன் மொழியாகக் கொண்டு திருத்தொண்டர் புராணம் என்றும் தெய்வத் தமிழ்க்காப்பியத்தைப் பாடி முடித்தார்.

நூல் இனிது நிறைவெய்தியதைக் கேட்டுச் சோழ மன்னன் மகிழ்ந்து, சேக்கிழாரை வணங்கித் தில்லை மூன்றிலில் வந்து நின்றான். 'வளவனே நம் வாக்கினால் 'உலகெலாம்' என்று அடியெடுத்துக் கொடுக்கச் சேக்கிழான், நம்முடைய தொண்டர்களது அடிமைத் திறத்தை விரித்து நூலாகச் செய்து முடித்தான். நீ அதைக் கேட்பாயாக," என்றதொரு வானொலி திருச்சிலம்பொலியுடன் யாவரும் கேட்பத் தோன்றியது.

புராண அரங்கேற்றத்திற்கு மன்னன் விரிவான ஏற்பாடுகளைச் செய்தான். சேக்கிழார் பெருமானால் ஒரு சித்திரைத் திருவாதிரை நாளில் தொடங்கப்பெற்ற புராண அரங்கேற்றம், அடுத்த ஆண்டு அதேநாளில் நிறைவெய்தியது. சோழமன்னன் திருத்தொண்டர் புராணத்தை யானை

மீதேற்றிச், சேக்கிழார் பெருமானையும் அதன்மீது எழுந்தருளச்செய்து, தானும் அவர்பின் ஏறியமர்ந்து, தன்னுடைய இரண்டு கைகளாலும் அவருக்கு வெண்சாமரை வீசி இறைவனது திருவருளை நினைந்து 'இதுவன்றோ நான் செய்த தவப்பயன்' என்று கூறி உளம் உருகினான். தில்லை நடராசப் பெருமான் திருமுன்பில் திருத்தொண்டர் புராணத்தைச் சேக்கிழார் வைத்தார். சோழமன்னன் சேக்கிழார் பெருமானுக்குத் 'தொண்டர்சீர் பரவுவார்' என்ற திருப்பெயர் சூட்டி இறைஞ்சிப் போற்றினான். அநபாயச் சோழன் திருத்தொண்டர் புராணத்தைச் செப்பேட்டில் எழுதி முன்னுள்ள பதினொரு திருமுறைகளுடன் இத்திருத்தொண்டர் புராணம் பன்னிரண்டாம் திருமுறை எனப் போற்றிச் சிறப்புச் செய்தான்.

பின்பு சேக்கிழார்பெருமான் திருத்தொண்டின் பெருமைகளை இடைவிடாது உணர்ந்து போற்றித் தவநிலையில் இருந்து ஒரு வைகாசிப் பூச நாளில் தில்லைச்சிற்றம்பலப் பெருமானது தூக்கியதிருவடி நிழலை அடைந்து இன்புற்றார்.



உ
குருபாதம்

# 1. ஸ்ரீமெய்கண்டதேவநாயனர் வரலாறு

பண்டைமறை வண்டரற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டவர் இதயகமல முகைக ளெல்லாம்
கண்திறப்பக் காசினிமேல் வந்தஅருட் கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணை மேவும்
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
பொற்பாதம் எப்போதும் போற்றல் செய்வாம்.

—ஸ்ரீ அருணந்திசிவம்.

சந்தானசாரியர் :

சைவ சமய ஆசாரியர்களை, சமயாசாரியர்கள் என்றும், சந்தானசாரியர்கள் என்றும் இரு கூறுபடுத்தி வழங்குவர் சைவ மரபு உணர்ந்தோர். அவர்களுள் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகியோர் சமயாசாரியராவர். இவர்கள் கி. பி. மூன்றும் நூற்றுண்டு முதல் எட்டாம் நூற்றுண்டுக்குட்பட்ட காலத்தில் வாழ்ந்தவர்கள். இக்காலத்தில்தான் தமிழ்நாட்டில் பௌத்தம், சமணம் என்னும் சமயங்கள் மேலோங்கி இருந்தன. இச்சமயங்களின் தலைவர்களையெல்லாம் இறையருளால் வாதில் வென்று தேவார திருவாசகங்களாகிய தோத்திரப் பாடல்களால் மீண்டும் பழைய வைதிக சைவ நெறியைத் தமிழகத்தில் தழைத்தோங்கச் செய்த பெருமை இச்சமயாசாரியர்களுக்கே உரியது.



பொய்கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித
மெய்கண்ட நாதன்அருள் விளங்குந் திருக்கோலம்.

மெய்கண்டதேவர், அருணந்திதேவர், மறைஞான சம்பந்தர், உமாபதிசிவனுர் என்ற இந்நால்வரும் சந்தாஞ சாரியராவர். இவர்கள் சமயாசாரியர்களால் தழைத்தோங்கச் செய்யப்பெற்ற சைவ சமயத்தின் கொள்கைகளாகிய முப் பொருள் உண்மையை வரையறுத்து ஒழுங்குப்படுத்திச் சிவஞானபோதம் முதலாக உள்ள சாத்திர நூல்க ளால் தெளிவாக விளக்கியவர்களாவார்கள். ஒரு வருக்குப் புத்திர சந்தானம் போல, இடையறவுபடாமல் வழிவழியாக ஞானபுத்திரர்களாய் உபதேசக்கிரமத்தில் சைவ மரபினைக் காத்தவர்களாதலின், இவர்கள் சந்தான குரவர்கள் என வழங்கப் பெறுகின்றனர். இவர்களது பரம்பரையில் வந்தவைகளே தென்னுட்டில் விளங்கும் சைவ ஆதீனங்கள்.

திருக்கயிலாயத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ கண்ட பரமசிவன் நந்தியெம்பெருமானுக்கு உபதேசிக்க, அவர் சனற்குமாரர் முதலியோர்க்கு உபதேசிக்க, சனற்குமாரர் சத்தியஞானதரிசனிகளுக்கு உபதேசிக்க, அவர் பரஞ்சோதிமா முனிகளுக்கு உபதேசிக்க, அவர் மெய்கண்டதேவருக்குஉபதே சிக்க, அவரது பரம்பரையில் பல கிளைகளாக வந்தனவே நந்தி மரபு என்றும், மெய்கண்ட சந்தானம் என்றும், திருக்கயி லாய பரம்பரை என்றும் வழங்கப்பெறும் ஆதீனங்கள். நந்தி. சனற்குமாரர், சத்தியஞானதரிசனிகள், பரஞ்சோதிமாமுனி கள் என்ற நால்வரும் திருக்கயிலையிலேயே வாழ்பவர்க ளாதலின், இவர்கள் அகச்சந்தானகுரவர்கள் எனப்பெறுவர். மெய்கண்டார் முதல் நால்வரும் மண்ணுலகில் வாழ்ந்து மக்கள் மாசினைப் போக்கி மாண்பினைத் தேக்கியவர்களா தலின், இந்நால்வரும் புறச்சந்தானகுரவர்கள் எனப் பெறு வர். புறச்சந்தானகுரவர்களுள் முதல்வராகிய ஸ்ரீ மெய் கண்டதேவ நாயனரின் குருபூசைத் திருநாள் ஒவ்வோ ராண்டிலும் ஐப்பசித்திங்களில் வரும் சுவாதி நன்னாளாகும்.

இந்நன்னாளில் அவரை வழிபட்டு அவரது வரலாற்றுட் காணப்படும் அனுபவ விளக்கத்தைச் சிந்தித்து அருள் நெறியில் வாழ்வது நமது தலையாய கடமையாம்,

**அவதாரம் :**

தொண்டை நன்னாட்டிற்கும், சோழ வளநாட்டிற்கும் நடுவில் உள்ளது நடுநாடு எனப்பெறும் திருமுனைப்பாடி நாடு. இந்நாடு சமயாசாரியர்களுள் அறந்தரு நாவுக்கரசும், ஆலால சுந்தரரும் பிறந்தருளும் பெரும்பேறு பெற்றிலங்குவது. இந்த நடுநாட்டிலே, திருஞானசம்பந்தராலும், திருநாவுக்கரசராலும் பாடப்பெற்ற திருப்பெண்ணாகடம் என்னும் திருத்தலத்திலே, சைவ வேளாளர் குலத்திலே, அச்சுதகளப்பாளர் என்னும் அருந்தவப் பெரியார் ஒருவர் இருந்தார். அவருக்கு எல்லா நலமும் வாய்த்திருந்தும், புத்திரப்பேறு மட்டும் வாய்க்காதிருந்தது. சித்தாந்த சைவமரபு தழைக்கவும், மேன்மைகொள் சைவ நீதி உலகெலாம் விளங்கவும் ஒரு சற்புத்திரன் வேண்டுமே என்று மனம் கவன்ற, அவர். தமது குலகுருவாகிய திருத்துறையூர் சகலாகம பண்டிதரிடம் தம் குறையைத் தெரிவித்தார். அவரும் அப்பொழுதே சைவ சம்பிரதாயப்படி திருமுறைகளைப் பூசித்து அடங்கல் முறையில் கயிறு சாத்திப் பார்த்தார்.

"பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ(டு) உள்ளம்நினை
வாயினவே வரம்பெறுவர் ஐயுறவேண் டாவொன்றும்
வேயனதோள் உமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாம் தீவினையே"

என்னும் திருஞானசம்பந்தர் அருளிய திருப்பாட்டு உதயமாயிற்று. இப்பாடலில் மகப்பேறும், நினைத்தவைகளும் கிடைக்கும் என்றும், அதற்காகத் திருவெண்காட்டிலுள்ள

முக்குள நீரில் முழுகவேண்டும் என்றும் குறிக்கப்பட்டிருத் தலின், ஆசிரியர் அதன்படி நடக்குமாறு அச்சுத களப்பாளருக்குக் கட்டளையிட்டார். அவரும் ஆசாரியர் ஆணையைச் சிரமேற்கொண்டு அருந்தவ மனைவியோடும் திருவெண்காடு சென்றார். இருவரும் ஒரு மண்டல காலம் ( 48 நாள் ) முக்குள நீரில் மூழ்கி முழுமுதற் பரம் பொருளை நாள்தோறும் வணங்கி வழிபட்டு வந்தார்கள். முடிவில் இறைவன் அச்சுதகளப்பாளர் கனவில் தோன்றி, "உனக்கு இப்பிறப்பில் புத்திரப்பேறு இல்லை" என்றருளி னார். அஃதுணர்ந்த அச்சுதகளப்பாளர் "எம்பெருமான் திருக்குறிப்பின்படி நிற்கக்கடவேன்; ஆயினும் திருஞான சம்பந்தர் திருப்பாடல் பொய்யாது என்னும் துணிவுடை யேன்," என்று விண்ணப்பித்தார். அது கேட்ட இறைவன் விணப்பயனால் ! உனக்குப் புத்திரப்பேறு இப்பிறப்பில் இல்லையாயினும், திருஞானசம்பந்தன் பாடல்களை நம்பி நம்மை வழிபட்டமையால், தேவாரங்களின் பெருமை விளங்கவும், சிவநெறி சிறக்கவும் ஞானசம்பந்தனைப்போல உனக்கு ஒரு மகவை அளிக்கின்றோம் என்றருளிச்செய்து மறைந்தார். இறையருள்பெற்ற களப்பாளர் கடந்தைநகர் போந்து வசித்துவரும் காலத்து ஒரு நன்னாளில் சித்தாந்த சைவச் செந்நெறி செழித்து விளங்க மெய்கண்டார் மகவாக அவதரித்தார்.

## உபதேசம் பெறுதல் :

தோன்றிய மகவினைத் தாலாட்டிச் சீராட்டிப் பால் நினைந்தூட்டி வளர்த்தனர். திருவெண்காட்டு இறைவரின் திருவருளால் அவதரிந்த அவருக்கு சுவேதவனப் பெரு மாள் என்ற பெயரையே பெயராக இட்டனர். நாளொரு மேனியும் பொழுதொருவண்ணமுமாக சுவேதவனப்பெரு மாள் வளர்ந்துவந்தார். இவ்வாறிருக்கும்நாளில் இவரது

தாய்மாமனார் இவரைத் தமது ஊராகிய திருவெண்ணெய் நல்லூருக்கு எடுத்துச் சென்று வளர்த்துவந்தார்; வயது இரண்டாயிற்று. அப்பொழுது பரஞ்சோதி மாமுனிவர் திருக்கயிலையிலிருந்து பொதிய மலைக்கு ஆகாய மார்க்க மாகச் சென்றுகொண்டிருந்தார். திருவெண்ணெய்நல்லூ ருக்கு மேலே வந்தபோது விமானம் தடைப்பட்டது. அதனால் திருவெண்ணெய்நல்லூரில் ஆட்கொள்ளத்தக்க வர் இருக்கின்றார் என்பதைத் திருவருளால் உணர்ந்து கீழே இறங்கி ஞானக் குழந்தையாம் சுவேதவனப் பெருமா னைக் கண்டார். முப்பொருள் உண்மையை ஈராட்டைப் பிராயத்துக் குழந்தையாகிய அவருக்கு உபதேசித்தார். குல குருவாகிய சத்திய ஞானதரிசனிகளின் திருப்பெயரை ஞானபுத்திரராகிய இவருக்குத் தமிழில் மெய்கண்டார் எனத் தீட்சாநாமமாகச் சூட்டினார். அது முதல் இவர் மெய்கண்டதேவராயினார்.

## சிவஞானபோதம் அருளல் :

உவமையிலாக் கலைஞானமும், உணர்வரிய மெய்ஞ் ஞானமும் உபதேசத்தால் கைவரப்பெற்ற மெய்கண்ட தேவர் "சிவஞானபோதம்" என்னும் சிறந்த சிவஞான நூலை வார்த்திகப் பொழிப்புடன் பன்னிரண்டு சூத்திரங் களால் அருளிச் செய்தார். இச்சிவஞானபோத நுண் பொருள்களை நேரில் இவர்பால் கேட்டுத் தெளிந்த மாண வர்கள் நாற்பத்தொன்பதின்மராவர். இவரது தந்தைக்குக் குலகுருவாக விளங்கியவரும், சகலாகம பண்டிதருமான ஸ்ரீ அருணந்திசிவாசாரியர் இவரது பெருமையைஉணர்ந்து இவரிடம் உபதேசம் பெற்று முதல் மாணவராயினார். மெய்கண்டார் அருளிச்செய்த சிவஞானபோதத்திற்குப் பாஷ்யமாக (விரிவுரை) அருணந்திதேவர் செய்யுள் வடி வில் சிவஞானசித்தியார் என்னும் அரிய நூலை அருளிச்

செய்துள்ளார். இவ்விரு நூல்களும் சைவ சித்தாந்தத்தைத் தெளிய விளக்கும் சிவஞான நூல்களாம். சிவஞான போதத்தை உள்ளிட்ட பதினான்கு நூல்கள் சித்தாந்த சாத்திரங்கள் என வழங்கப்பெறும். அவற்றுள் ஒன்றாக விளங்கும் "உண்மை விளக்கம்" என்ற நூலை அருளிச் செய்தவர் இவர் மாணவர்கள் நாற்பத்தொன்பதின்மருள் ஒருவராகிய திருவதிகை மனவாசகங் கடந்தாராவர். சிவஞானபோதம், பிரமாண இயல், இலக்கண இயல், சாதன இயல், பயனியல் என் நான்கு பிரிவாக அமைந்து கடவுள், உயிர்கள், தளை என்ற முப்பொருள்களின் இயல்புகளைத் தெளிவாக விளக்குகின்றது.

## மெய்கண்டார் திருநாள் :

மெய்கண்டதேவர் தம்மை வந்தடைந்த பக்குவான்மாக்கள் பலருக்கும் ஞானோபதேசம் செய்து சித்தாந்த சைவச் செஞ்ஞாயிறாக விளங்கியருளினார். தமது முதல் மாணாக்கராகிய ஸ்ரீ அருணந்தி தேவநாயனாருக்கு ஆசிரியத் தலைமை நல்கி, ஓர் ஐப்பசித்திங்கள் சுவாதி நன்னாளில் பல்லுயிரும் களி சிறப்பச் சிவ பரிபூரண நிலை எய்தினார். இவரது திருக்கோயில் திருவெண்ணெய்நல்லூரில் திரு அருட்டுறை ஆலயத்திற்கு மேல்பால் உள்ளது. இத்திருக் கோயில் திருவாவடுதுறை ஆதீனத்தின் அருளாட்சியில் அமைந்து இலங்குகின்றது. நித்திய நைமித்திய பூசைகள் சிறப்பாக நடைபெற்று வருகின்றன. சைவ நெறி நிற்போர் அனைவரும் தமது ஆசாரியராகிய ஸ்ரீ மெய்கண்ட முதல்வரின் குருபூஜைத் திருநாளைக் கொண்டாடிச் சிறப் பெய்துவார்களாக.

மெய்கண்டதேவர் திருவடி வாழ்க
வாழ்க சீர் அடியார் எல்லாம்.

---

# 2. ஸ்ரீ அருணந்திசிவாசாரிய சுவாமிகள் வரலாறு

ஈராண்டிற் சிவஞானம் பெற்றுயர்ந்த
மெய்கண்டார் இணைத்தாள் போற்றி
நாராண்ட பல்லடியார்க் கருள்புரிந்த
அருணந்தி நற்றுள் போற்றி
நீராண்ட கடந்தைநகர் மறைஞான
சம்பந்தர் நிழற்றுள் போற்றி
சீராண்ட தில்லைநகர் உமாபதியார்
செம்பதுமத் திருத்தாள் போற்றி,

— சந்தானுசாரியர் புராண சங்கிரகம்.

## திருவவதாரம்

மெய்கண்ட தேவர் அவதரித்த அந்நடுநாட்டிலே சுந்தரர் தவநெறி வேண்டிப் பெற்ற தலமாகிய திருத்துறையூரிலே ஆதி சைவ மரபிலே அருணந்திசிவனுர் அவதாரம் செய்து சந்தான பரம்பரை முதற் குரவரான மெய்கண்ட தேவ நாயனுரின் சீடரானுர். அவ்வாறு ஆவதற்குமுன் இவர் சகல ஆகமங்களிலும் வல்லவராய் இருந்தமையால், 'சகலாகம பண்டிதர்' என்னும் சிறப்புப் பெயர் பெற்று விளங்கித் தமது குருவழி முறைப்படி, வேளாளர் மரபினர்க்குக் குலகுருவாய் விளங்கியிருந்தார். மெய்கண்ட தேவர் அவதாரத்திற்கே காரணமாய் அவர்தம் தந்தையார் திருப்பெண்ணுகடம் அச்சுதகளப்பாளர் என்பவருக்கு தேவாரத் திருமுறையில் கயிறு சாத்திப்பார்த்துத் "பேயடையா பிரிவெய்தும்" என்னும் திருப்பாடல் உதயமாகக் கண்டு, திருவெண்காட்டிறைவரை வழிபடும்படி கட்டளையிட்டவர் இவரே



திருத்தவத்துறையூர்,
ஸ்ரீ அருணந்தி தேவ நாயனர்.

என்பதும், அதன்படி ஒழுகிய அச்சுதகளப்பாளருக்கு மெய் கண்டார் மகவாக அவதரித்து ஆசாரியத்தன்மை பெற்று விளங்கியதும் மேலே சொல்லப்பட்டன.

மெய்கண்டார் ஆசாரியத்தன்மை பெற்று விளங்கி யிருந்த நிலையில் அவர் தம்மை வந்து காணவில்லையே என்ற எண்ணத்துடனும், இரண்டு வயது நிரம்பிய குழந்தை சைவ சித்தாந்த பாடம் எப்படிச் சொல்கிறது என்பதைக் காண வேண்டுமென்னும் நோக்கத்துடனும் சகலாகம பண்டிதர் திருவெண்ணெய்நல்லூருக்குத் தமது விருது களுடன் எழுந்தருளினார். அவ்வூர் மக்களனைவரும் வீடுகள் தோறும் பூரண கும்பமெடுத்து மங்கலவாத்தியங்களோடு தங்கள் குருவாகிய சிவாசாரியரை எதிர்கொண்டு வரவேற் றனர். மெய்கண்டார் மாத்திரம் தமது இருக்கையிலேயே வீற்றிருந்து சித்தாந்த ஞானத்தை உபதேசித்துக்கொண்டி ருந்தார். அதுகண்ட அருணந்தி சிவனார் தாம் ஓரிடத்தில் தங்கி இருந்துகொண்டு மெய்கண்டாரைப்பற்றி வினவினார்; அவரை அழைத்துவருமாறு தமது சீடர்களை அனுப்ப, அவர்கள் சென்று மெய்கண்டாரது சாத்திர உபதேசத்தில் ஈடுபட்டு, அவரடிக்கு ஆளாகிவிட்டனர். இதை அறிந்த சகலாகமபண்டிதர் தாமே மெய்கண்டார், சாத்திர உபதே சம் செய்யும் திருமாளிகைக்கு எழுந்தருளினார். அப்பொழு தும் உபதேசத்தில் ஈடுபட்டிருந்த மெய்கண்டார் இவரை வரவேற்கவில்லை. அவ்வமயம் மெய்கண்டார் ஆணவ மலத் தின் தன்மையைப்பற்றி விளக்கம் தந்து கொண்டிருந்தார்.

உடனே தம்மைப் பொருட்படுத்தவில்லையே என்று எண்ணிய சகலாகம பண்டிதர், தன் முனைப்போடு " ஆண வத்தின் சொரூபம் யாது ? " என்று மெய்கண்ட தேவரைக் கேட்டார். சிவஞானமே உருவாய்த்திகழ்ந்த மெய்கண்டார் இன்முகத்தோடு அவரைத் திருவருள் நோக்கம் செய்து

தமது திருவிரலால் அவரையே சுட்டிக்காட்டி, ஆணவ சொரூபத்தை உணரச் செய்தார். அக்கணமே, அச்சிவ ஞானக் கதிரவனது அருளொளி நோக்கால் மலவிருள் அகலப்பெற்ற சகலாகம பண்டிதர் உண்மை உணர்ந்து, மெய்கண்ட தேவரது திருவடியில் வீழ்ந்திறைஞ்சித் தமக்குச் சிவஞானத்தைத்தந்தருள வேண்டுமென்று குறையிரந்தார். அவருக்கு உடனே திருவடி தீட்சை செய்து, மெய்யுணர்வு அருளி 'அருணந்தி' எனத் தீட்சா நாமம் செய்து, சிவஞானபோதச் செம்பொருள் தெரித்துத் தமது நாற்பத்தொன்பது மாணவர்களுள் முதன் மாணவராகும் பேற்றை நல்கினார். தமக்குச் செய்த இப்பெரு நன்மையை அருணந்தி சிவம், தாம் இயற்றிய "சிவஞான சித்தியார் பாயிரத்துள்ளும்" இருபா இருபஃது என்ற சித்தாந்த நூலினுள்ளும் அழகு பெற வியந்து துதித்துள்ளார்.

இவர் இயற்றிய நூல்கள் இரண்டு. ஒன்று சிவஞான சித்தியார்; இந்நூல் மெய்கண்ட சாத்திரம் பதினான்க னுள்ளும் விரிந்த நூலாய், புறச் சமயம் மறுக்கும் பரபக்க மும், அகச்சமயம் விளக்கும் சுபக்கமுமுடையதாய்த் தாயு மானார் முதலியோரால் பெரிதும் போற்றப் பெற்றதாய், சிவ ஞானபோதத்திற்குச் செய்யுள் வடிவில் அமைந்த பாஷ்ய மாய் உள்ள சிவஞானக் களஞ்சியமாகும். மற்றொன்று இருபா இருபஃது என்பதாகும். இதுவும் அப்பதினான் கனுள் ஒன்று. இதில் இவர் தமது குருநாதரை வினவு முகத் தால் சித்தாந்த உண்மையைத் தெளிவுற விளக்கியுள்ளார். இவரது சிவஞானசித்தி நெறியினை வழிவழியாகப் போற்றி வளர்த்து வருவதே நமது தருமபுர ஆதீனமாகும்.

சில காலங் கழித்து அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் தமது மாணவர்களுள் சிறந்தவரான மறைஞான சம்பந்த ருக்கு ஞானோபதேசம் செய்தருளி, ஓர் புரட்டாசிப் பூர நாளில் அகண்டபரிபூரண சச்சிதானந்த நிலையை எய்தினார்.

இவரது சமாதித் திருக்கோயில் திருத்துறையூரில் அமைந்துள்ளது. இவர் கி பி. பதின்மூன்றும் நூற்றாண்டில் வாழ்ந்தவர்.

இவர் இயற்றிய சிவஞான சித்தியாரின் பெருமையைக் கீழ்வரும் பாடல்களால் தெளியலாம்,

" வள்ளுவர்நூல் அன்பர்திரு வாசகந்தொல் காப்பியமே
தெள்ளுபரி மேலழகன் செய்தவுரை—ஒள்ளியசீர்த்
தொண்டர் புராணம் தொகு சித்தி யோராறும்
தண்டமிழின் மேலாந் தரம்".

—தனிப்பாடல்.

" பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியிற் சித்தியிலே
ஓர்விருத்தப் பாதிபோ தும் "

—குருஞானசம்பந்தர்.

" பாதிவிருத் தத்தாலிப் பார்விருத்த மாகஉண்மை
சாதித்தார் பொன்னடியைச் சாருநாள் எந்நாளோ "

—தாயுமானர்.

" சிவத்திற்குமேல் தெய்வமில்லை
சித்திக்குமேல் நூல் இல்லை "

என்பது பழமொழி.



# 3. ஸ்ரீ மறைஞானசம்பந்த சிவாசாரியார் வரலாறு

பார்திகழ வளர்சாம வேதம் மல்கப்
பாராசரமா முனிமரபு பயில ஞானச்
சார்புதர வந்தருளி எம்மை ஆண்ட
சைவசிகா மணிமருதைத் தலைவன் அந்தண்
கார்மருவு பொழில் புடைசூழ் மதில்மீதே மதியங்
கடவாமை நெடுங்கொடியின் கரந்தகையுங் கடந்தைச்
சீர்நிலவு மறைஞான சம்பந்த் னெந்தை
திருவளரு மலரடிகள் சென்னி வைப்பாம்.

## தோற்றம் :

"அறந்தரு நாவுக்கரசும் ஆலால சுந்தரரும்
பிறந்தருள வுளதானல் நம்மளவோ பேருலகில்
சிறந்ததிரு முனைப்பாடித் திறம்பாடுஞ் சீர்ப்பாடு"

என விதந்தோதப் பெற்ற நடுநாட்டில் உள்ளது திருப்பெண்ணாகடம் என்னும் திருத்தலம். இங்கேதான் திருநாவுக்கரசு சுவாமிகளது திருத்தோளில் சூல, இடபக் குறிகளைப் பரமனருளால் சிவ பூதம் பொறித்தருளியது.

இத்தலத்தில், அந்தணர் குலத்தில் பராசர முனிவர் கோத்திரத்தில் சாம வேதிகள் குடியில் தோன்றினவர் மறை ஞானசம்பந்த சிவாசாரியார். இவர் எல்லா மறைகளையும் ஓதி உணர்ந்தவர். இவர் அருணந்தி சிவாசாரியாரை அடைந்து அவர்பால் "அடிசேர் ஞானம்" பெற்றுத்தில்லையில் ஞான பூசையியற்றிக் கொண்டு தங்கியிருந்தார்.



உளமார் திருவருளை உமாபதியார்க்கும் அளித்த
வளமார் கடந்தை மறைஞான சம்பந்தர்

## உமாபதிசிவனுருக்கு உபதேசம் செய்தது :

திருத்தில்லையில் உள்ளவர்கள் மூவாயிரவர்கள். இவர்களுள் ஒருவர் உமாபதி சிவாசாரியார் ஆவார். இவர் வேத சிவாகமங்களை யெல்லாம் கற்றுத் தெளிந்தவர். ஒரு நாள் கோயில் வழிபாட்டை முடித்துக்கொண்டு தில்லை வாழ் அந்தணருக்குரிய பல விருதுகளுடன் ஒரு சிவிகையிலேறி வீட்டை நோக்கிச் சென்று கொண்டிருந்தார். வழியில் இதனைக் கண்ட மறைஞான சம்பந்தர் தம் சீடர்களை நோக்கிப் "பட்டகட்டையில் பகல் குருடு ஏகுதல் பாரீர்" என்று சொன்னார். இவ்வார்த்தைகளைக் கேட்ட உமாபதி சிவம் உடனே சிவிகையினின்று கீழே இறங்கி மறைஞான சம்பந்தரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, அவர் சொன்ன வாக்கியத்திற்குப் பொருளை வினவினர். ஆசிரியரும் அவ்வாக்கியத்தின் பொருளைத் தெரித்தருளினர். (பட்ட கட்டை - சிவிகை. பகல் குருடு - பகலிலே விருதாக விளக்கெடுத்துச் சென்றது. இது வெளிப்படைப் பொருள். இதன் குறிப்புப் பொருள், பட்ட கட்டை - இன்பம் இல்லாத உலகம். பகல் குருடு - கல்வி கற்றும் இதனை அறியா திருத்தல்.) உடனே உமாபதி சிவம் சிவஞானப் பேறென்றினையே விரும்பி ஆசாரியருக்குத் தொண்டு செய்து வந்தார்.

## சீடரின் பக்குவத்தைக் காண்டல் :

ஒருநாள் தம்சீடருடையபக்குவத்தைஅறிய மறைஞானசம்பந்த சிவம் செங்குந்தர்தெருவழியாகச் சென்று தம்பசியைத் தணித்தற்பொருட்டுப் பாவில் செலுத்திய கூழினைவார்க்கும் படிகேட்டு ஏற்று, 'சிவப்பிரசாதம், சிவப்பிரசாதம்' என்று சொல்லி உண்டார். அவர் புறங்கையில் ஒழுகிய மிச்சத்தை உமாபதிசிவம்ஏற்று,'குருப்பிரசாதம்,குருப்பிரசாதம்'என்று

சொல்லிப் பருகினார். உடனே இதனைக் கண்ட ஆசிரியர் இவர் பக்குவ நிலையை உணர்ந்து, இவருக்குச் சிவஞான போதப் பொருளை உபதேசித்தருளினார்.

## இறைவனடியில் இரண்டறக் கலத்தல் :

இங்ஙனம் பல நாள் தில்லையில் சிவபூசை செய்து கொண்டு விளங்கிய மறைஞான சம்பந்தர், தில்லைக்கு மேற்கிலுள்ள திருக்களாஞ்சேரியில்சில நாள் தங்கியிருந்து, ஓர் ஆவணி உத்திர நன்னாளில் சிவபெருமான் திருவடி நிழலை அடைந்தார்.





அடியார்க் கெளியனென் றம்பலவ னேஎழுதும்
படியாஞ்சீர் பெற்றஉமா பதிதேவ நாயனர்

# 4. ஸ்ரீ உமாபதி சிவாசாரிய சுவாமிகள் வரலாறு

சீராண்ட தில்லைநகர் உமாபதியார்
செம்பதுமத் திருத்தாள் போற்றி.

— *சந்தானசாரியர் புராண சங்கிரகம்.*

## தோற்றம் :

*தில்லைப்பதியில் வாழும் திருவுடையந்தணர் மூவாயிர வர். இவர்கள் பொது நன்மைக்காக முத்தீயோம்புதலைக் கைக்கொண்டு சிவநெறிச் சார்பாகிய வைதிக நெறியினையும் போற்றிவந்த மரபைச் சேர்ந்தவர்கள். இவர்களது மரபில் உமாபதி சிவாசாரிய சுவாமிகள் தோன்றிக் கூத்தப் பெருமானைப் பூசிக்கும் பேறுபெற்றுத் திகழ்ந்தார்.*

## குருவருளைப் பெறுதல் :

இவர் வேத சிவாகமங்களை யெல்லாம் நன்கு கற்றுத் தெளிந்து தவநெறி யொழுகிப் பக்குவம் வாய்ந்திருந்த நிலையில் மறைஞானசம்பந்தரால் ஆட்கொள்ளப்பெற்ற முறை மேலே அவரது வரலாற்றில் கூறப்பெற்றது.

இவர் செங்குந்தர் வார்த்த கூழை உண்டமைபற்றித் தில்லை மூவாயிரவர் இவரைக் குலமுறை பிறழ்ந்தவராகக் கருதி நடராஜப்பெருமானுக்குப் பூசை செய்யத் தகுதியற்ற வரென்று இகழ்ந்தனர். ஆதலால் இவர் கொற்றவன் குடிக்குச் சென்று அங்கே ஒரு மடம் அமைத்து அதில் தம்அடியார்சூழச் சிவபெருமானை விதிப்படிவழிபட்டிருந்தார்.

### ஆண்டவன் அருளைப் பெறுதல் :

உமாபதி சிவாசாரியாரின் பூசைக்குரிய நாளில் அவரைச் செல்லவிடாமல் மற்றவர் தடுத்தனர். சுவாமி களும் மனத்தளர்ச்சியுடன் தமதுமடத்தில் தங்கியிருந்தனர். ஏனைய தீக்ஷிதர்கள் கோயிலுக்குச் சென்று அழகிய சிற்றம் பல முடையாரது பேடகத்தைத் திறந்து பார்த்தனர். அங்கே பெருமானது திருவடிவத்தைக் காணாது திகைத்து நின்றனர். அப்பொழுது யாவருங் கேட்க வானில் ஒரு மொழி பின் வருமாறு எழுந்தது. " நம்மைப் பூசையாற்றுந் தகுதியுடையவன் உமாபதியாதலால், அவன்பால் அமர்ந் தோம் ". உடனே தில்லைமூவாயிரவர் அவரிருப்பிடஞ் சென்று அவரை வணங்கித் தம்மை மன்னித்துப் பூசைக்கு எழுந்தருளி வருமாறு வேண்டினர். அவரும் அவ்வாறே சென்று பெருமானைப் பூசித்துவிட்டுத் தமது திருமடத்திற்கு வந்து தங்கியிருந்தார்.

### பெற்றான் சாம்பானுக்கும் முள்ளிச்செடிக்கும் முத்திகொடுத்தது

தாழ்ந்த குலத்திலுதித்த பெற்றான் சாம்பான் என்பவன் விறகு வெட்டி ஜீவனம் செய்பவன். திருமடைப் பள்ளிக்கு ஒரு விறகுக் கட்டும், உமாபதி சிவத்திற்கு ஒரு கட்டும் தினமும் கொடுத்து வந்தான். அவனுக்கு நடராஜப் பெருமான் அருள்புரிய எண்ணினார். சிவத்தின் பெருமையை உலகிற்கு உணர்த்த வேண்டி அவர் மூலம் அதனைச் செய்ய எண்ணியே ஒரு கைச்சீட்டைப் பெற்றான் சாம்பானிடம் கொடுத்து, உமாபதி சிவத்தைப் பார்க்கப் பணித்தனர். அது வருமாறு,

" அடியார்க் கெளியன் சிற்றம்பலவன் கொற்றங்
குடியாற் கெழுதியகைச் சீட்டுப்—படியின்மிசைப்
பெற்றான் சாம்பானுக்குப் பேதமறத் தீக்கைசெய்து
முத்தி கொடுக்க முறை ".

இதனைப் பெற்ருன் சாம்பான் உமாபதி சிவத்திடம் கொடுக்கச் சுவாமிகள் பெருமான் திருவருளைச் சிந்தித்து அவன் வீடு பேறு அடையக்கூடிய பக்குவ முடையவனாக இருந்தபடியால், அதற்கேற்ற வகையில் அவனுக்கு அருள் செய்ய அவனும் முத்தியடைந்தான். இவ்வுண்மையை உணர்ந்த அவன் சுற்றத்தார் அரசனிடம் விண்ணப்பிக்க அரசனும் சுவாமிகளை வேண்டி அவ்வுண்மையைப் பலரறிய விளக்க வேண்டுமென்று விண்ணப்பித்தான். சுவாமிகளும் பெருமான் திருமஞ்சன நீர் தினமும் பட்டுப் பரிபக்குவ மடைந்திருந்த முள்ளிச் செடியை அருட்பார்வையால் பார்த்தார். அது முத்தியடைந்தது. அனைவரும் ஐயம் தீர்ந்தனர்.

## ஏருத கொடியை ஏற்றுவித்தது :

நடராஜப்பெருமான் திருவிழாவின்போது ஒரு நாள் தில்லை மூவாயிரவர் கொடியேற்ற முயன்றபோது அது ஏருதது கண்டு வருந்தினர். பெருமான் திருவருளால் உமாபதிசிவம் "கொடிக்கவி" பாடி அதனை ஏற்றுவித்தார். பிறகு சில சாத்திரங்களை உலக உபகாரமாக அருளிச் செய்து, ஒரு சித்திரை அத்தத் திருநாளில் சிவபெருமானோடு இரண்டறக் கலந்தனர்.

## இவர் அருளிய நூல்கள் :

(1) சிவப்பிரகாசம் (2) திருவருட்பயன் (3) வினா வெண்பா (4) போற்றிப் பஃறொடை (5) உண்மை நெறிவிளக்கம் (6) கொடிக்கவி (7) நெஞ்சுவிடுதூது (8) சங்கற்ப நிராகரணம்.



# மெய்கண்ட சாத்திரம்

அறுவகைச் சமயத்தோர்க்கும்
அவ்வவர் பொருளாய்வேறுங்
குறியது வுடைத்தாய் வேதா
கமங்களின் குறியிறந்தங்(கு)
அறிவினில் அருளால் மன்னி
அம்மையோ டப்பனுகிச்
செறிவொழி யாது நின்ற
சிவனடி சென்னி வைப்பாம்.

## சமயங்களுட் சைவம் :

உலகத்தில் நிலவும் சமயங்கள் பல. அவற்றின் பொருளியல்பு கூறும் நூல்களும் பல. இவை ஒன்றோ டொன்று முரணுவனவாகவுள்ளன. இவற்றுள் கடவுள், உயிர், உலகு எனும் முப்பொருள்கள் பற்றி முடிந்த முடிபுகளைத் தெள்ளிதின் உணர்த்தி மெய்யுணர்வைத் தரவல்ல சமயம் சைவ சமயமே என்பது அநுபவம் பெற்ற பெரியோர் பலர்க்கும் உடன்பாடாம்.

## சமயாசாரியர் தோற்றம் :

இச்சமயம் இறைவன் திருவருளால் தோன்றிப் பண்டு தொட்டு உலகின்கண் வழங்கி வருவது. இடையிடையே வேற்றுச் சமய நுழைவால் உண்மையறியாது மக்கள் மயங் கும்போது முன்னவனே முன்னின்று அருளாசிரியர்களை உலகிற்கு அனுப்பி அவர்களால் மீளவும் பண்டைய பெருமையும் விளக்கமும் உடையதாகச் செய்யப்பெற்றது. முதற்கண் புத்த சமய நுழைவால் மக்கள் மனம்மாறிய காலத்துத் திருவாதவூரடிகள் தோன்றி முதல்வன் அருளால் இச்சமயத்தைப் பண்டைய நிலையில் நிறுவினர்.

பின்னர், சமண சமயக் கணக்கர்களால் இடையூறு நேர்ந்த போது திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் திருநாவுக்கரசு நாயனார் என்னும் இரு பேராசிரியர்கள் உலகில் தோன்றி இச்சமயத்தை நிறுவி மக்களிடைப் பரவுமாறு செய்தார்கள். அவர்களுக்குப் பின் நம்பியாரூரர் தோன்றியருளி, இறைவன்றன் பெருங்கருணையினையும், அவன் அடியாரது அடிமைத் திறத்தையும் விளக்கியருளினார். இந் நால்வரும் சைவசமய குரவர்கள் எனப்படுவர்.

## பன்னிரு திருமுறை :

இப்பெருமக்கள் அருளிச்செய்த தேவாரம், திருவாசகம் திருக்கோவையார் என்பவையும் இவற்றுக்கு முன்னும் பின்னும் சிவானுபூதிச் செல்வர்களால் அருளிச் செய்யப் பெற்ற அருட் பாடல்களும் ஈசன் அருள்வழி நின்ற பெரியோர்களால் பன்னிரு திருமுறைகளாகத் தொகுக்கப் பட்டன.

## சந்தானசாரியர் தோற்றம் :

இனி, திருமுறை ஆசிரியர்கள் காலத்திற்குப் பின் வேதவியாசரியற்றிய பிரமசூத்திரம், ஸ்ரீ நீலகண்ட சிவாசாரியர், சங்கரர் முதலாயினார் இயற்றிய பேருரைகளுடன் தமிழ்நாட்டில் நிலவிற்று. அவற்றால் சமயக் கொள்கைகளைப்பற்றிப் பெருங்குழப்பம் விளைவதாயிற்று. உண்மை அநுபவமே கடவுள் நெறிக்கண் உண்மை யுணர்தற்குச் சாதனம் என்னும் அடிப்படை யுண்மை மக்கள் உள்ளத்தை விட்டகன்றது. பேச்சு வன்மையால் வடநூல் மேற்கோள் காட்டித் தர்க்கமொடு உத்தரங்களால் சமயம் சாதிப்பாரே மதாசாரியர்கள் எனப் போற்றப்படுவார் ஆயினர். தமிழ் நன்மக்கள் திருமுறைகளும், பொருள் முடிபுகளில் அவற்றோடு மாறுபடாத திருக்குறள் முதலிய தெய்வ நூல்களு

மாய இவற்றின் உண்மைப் பொருளும் இவற்றையருளிய ஆசிரியர்களின் பெருமையும் உணரமுடியாது அலமந்தனர். பந்தம் வீடு என்னும் இருநிலையிலும் முதற் பொருள், உயிர்களோடு கலந்து உடனாய் நின்று உபகரிக்கும் நிலையினைத் தெரிவிப்பதாய் உபநிடதங்களில் எழுந்த "அத்துவிதம்" என்ற சொல்லின் இயல்பும், பொருளின் இயல்பும் அறியாராய் மயங்கித் தியங்கினர். அம்மயக்கந் தீர்தற்பொருட்டும், திருமுறைகளின் பெருமை நிலவுலகில் நிலவுதற்பொருட்டுமே முதல்வன் திருவருளால் மெய்கண்ட சந்தானம் இத் தமிழ் நாட்டில் ஏற்பட்டது.

திருக்கயிலாய பரம்பரை, திருநந்திமரபு. புறச்சந்தான முதற்குரவராகிய மெய்கண்ட தேவ நாயனார் இவ்வுலகில் தோன்றியதற்குக் காரணங்கூறும்,

" நல்வியாத முனியுரைசெய் சூத்திரத்தின்
பாடியமோர் நான்குங் கொண்ட
சொல்வாய்மை பொருள்வாய்மை தெளிதலுற்ற
தோராது சோக முற்றோர்
எல்லாரும் அத்துவித சுத்தநிலை
இனிதெய்திச் சோக மேயப்
பொல்லாத சமயிகளும் அதிசயிப்பப்
புவனிமிசைப் போதம் ஏற. "

என்னும் சந்தானுசாரியர் புராணச் செய்யுளால் அது விளங்கும்.

மெய்ஞ்ஞான பாநுவாகிய மெய்கண்ட முதல்வர் சைவ சமய முடிபுகளையெல்லாம் தெற்றெனத் தோற்றிப் பிற சமயங்களின் நிலை இது, இது என அளவிட்டு அறிதற்குக்

கருவியாக " சிவஞான போதம் " என்னும் உயர்ஞானத் தலைமணி நூலினை அருளிச் செய்து, அதற்குக் கருத்துரை வார்த்திகம் எனப்படும் பொழிப்புரையும் இயற்றியருளினார். பின்பு அவர் தம் முதல் மாணாக்கர் அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் " சிவஞான சித்தி " என்னும் பெரு நூலினைச் சிவஞான போதத்தின் வழி நூலாக அருளிச் செய்தனர். " இருபா இருபஃது " என்னும் மற்றொரு நூலினையும் அவர் தாமே அருளிச் செய்தனர். மெய்கண்ட முதல்வரின் மற்றொரு மாணாக்கர் திருவதிகை மனவாசகங் கடந்தார் " உண்மை விளக்கம் " என்னும் நூலினை இயற்றியருளினார். ஸ்ரீ அருணந்திசிவாசாரியரது மாணாக்கர் பல்லோருள்ளும் சிறந்தவர் ஸ்ரீ மறைஞான சம்பந்த சிவாசாரியர். அவர் தம் மாணாக்கர் பல்லோருள்ளும் சிறந்தவர் ஸ்ரீ உமாபதி சிவாசாரியர். இவர் சிவப்பிரகாசம் முதலாக எட்டு நூல்களை இயற்றியருளினார். மெய்கண்ட முதல்வர் முதலாகச் சொன்ன இந் நால்வரும் சைவசந்தான குரவர்கள் எனப் படுவர்.

## மெய்கண்ட சாத்திரம் :

சந்தானசாரியர்களால் அருளிச் செய்யப்பட்ட பதினொரு நூல்களும் திருவதிகை மனவாசகங் கடந்தார் அருளிய உண்மை விளக்கமும் இவர்கள் காலத்துக்கு முன்னரே சிவாநுபூதிச் செல்வர்களால் இயற்றப்பெற்ற உபதேச நூல்களாகிய திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார் என்னும் நூல்களும் ஆகப் பதினான்கு நூல்களும் மெய்கண்ட நூல்கள் எனவும் சித்தாந்த சாத்திரம் எனவும் வழங்கும்.

இந்நூல்கள் யாவும் ஒன்றொடொன்று முரணாதன வாய், " பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்

செம்பொருள்" காணலுறுவார் யாவர்க்கும் திருவருட் கண்ணுய்த் திகழ்வனவாயும், பொருட்பெருங்கடலாம் வேதமும், அதன் சித்தாந்தம் உரைக்கும் சிவாகமங்களும் ஆகிய பெரு நூல்களின் உண்மை முடிபை அங்கை நெல்லி என விளக்குவனவாயும், அருள் நூல்களாகிய திருமுறைகளிற் காணப்படும் அநுபவப் பயன்களுக்கு மரபு உணர்த்துவன வாயும், அளவை அடிப்படை தருவனவாயும், கடவுள் ஞானம் விளக்கும் எல்லாவற்றுள்ளுஞ் சிறந்து சிரத்தானம் பெற்றுள்ளவை.

இவை முறையே திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவஞானபோதம், சிவஞானசித்தி, இருபா இருபஃது. உண்மை விளக்கம், சிவப்பிரகாசம், திருவருட் பயன், விஞ வெண்பா, போற்றிப்பஃறொடை. கொடிக்கவி, நெஞ்சுவிடு தூது, உண்மைநெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம் என வைத்து எண்ணப்படும். இவற்றைக் கீழ்க்கண்ட வெண்பாவும் உணர்த்தும்.

" உந்தி களிறுரு டுயர்போதம் சித்தியார்
பிந்திருபா உண்மை பிரகாசம்—வந்தவருள்
பண்புவிஞ போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
உண்மைநெறி சங்கற்பம் உற்று"

### திருவுந்தியார் :

இவற்றுள் 'திருவுந்தியார்' என்பது முதல்வனே ஞாஞசாரியனுய்த் தோன்றி அருள் ஞானம் நல்குவன் எனவும், அவ்வருள்ஞானம் பின்னர்ச் சிந்தித்தல், தெளிதல் என்பவற்ருல் சிவபோகப் பெரும் பயனைத் தரும் எனவும் விளக்குகின்றது. ஆதார யோகமும், நிராதார யோகமும் கேள்வி ஞானம், பின் அநுபவ ஞானமாய் விளைதற்குத் துணைசெய்தலின், அவற்றின் பயிற்சி இன்றியமையாத

தென்பதையும் உணர்த்துகின்றது. 45 கலித்தாழிசைகளாலாயது.

அகளமா யாரும் அறிவரி தப்பொருள்
சகளமாய் வந்ததென் றுந்தீபற;
தானாகத் தந்ததென் றுந்தீபற. 1

உள்ளம் உருகில் உடனாவர் அல்லது
தெள்ள அரியரென் றுந்தீபற;
சிற்பரச் செல்வரென் றுந்தீபற. 7

அவனிவ னான(து) அவனருளா லல்ல(து)
இவனவன் ஆகானென் றுந்தீபற;
என்றும் இவனேயென் றுந்தீபற. 40

என்பவை இதன் பொருள்விழுப்பந் தெரிதற்கு எடுத்துக் காட்டாகற்பாலன.

இது திருவியலூர் உய்யவந்த தேவநாயனார் அருளிச் செய்தது. இதனை அருளிச் செய்த யாண்டு சாலி 1070 என்ப. கி. பி. 1148.

வைய முழுதும் மலக்கயங் கண்டிடும்
உய்யவந்தா னுரை உந்தீபற;
உண்மை யுணர்ந்தானென் றுந்தீபற. 45

என்றதனால் இதன் பயன் உணர்தற்பாலது.

திருக்களிற்றுப்படியார் :

இந்நூல் திருவுந்தியாரின் உட்கருத்தை மரபுமாத்திரையான் விளக்கும் வழிநூலாகும். இது 100 திருவெண்பாக்களாலாயது. இதனை இயற்றியருளியவர் திருக்கடவூர்

உய்யவந்த தேவநாயனுர். இவர் திருவுந்தியார் ஆசிரியரது மாணுக்கருக்கு மாணுக்கர். இவர் இதனை சாலி 1100-ல் இயற்றினுர் என்ப. இந்நாயனுர் திருவம்பலத்திற் சென்று வணங்கி இந்நூலைத் திருக்களிற்றுப்படியில் வைக்கத் திருக்களிற்றுக்கை நிமிர்ந்து இதனை வாங்கிக் கூத்தப் பெருமான் திருவடியில் கொடுத்தமையால் "திருக்களிற்றுப்படியார்" என்னும் பெயர் பெறுவதாயிற்று.

இந்நூல் தான் விளக்கும் சிவானுபவப் பயன்களைத் திருக்குறள், திருமுறை என்பவற்றிலிருந்து மேற்கோள் காட்டி நிறுவுதலோடு, அறுபான்மும்மை நாயன்மார்தம் அனுபவங்களை எடுத்துக்காட்டியும் விளக்குகின்றது. இறைவன் அடிகூடுதற்குரிய சாதனத்தைச் சிவதன்மம், சிவயோகம், சிவஞானம் என மூன்ருக இந்நூலுட் கூறப் படுதல் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர் அருளிச்செய்த சிவபுரத் திருப்பதிகத்துட் கூறப்படுவதனேடு ஒத்திருத்தல் கருதத்தக்கது. அறுபான் மும்மை நாயன்மார்களின் அற்புதச் செயல்களை உள்ளவாறு உணரலுறுவார் அவற்றை வல்வினை, மெல்வினை எனப் பிரித்துவைத்து உணரவேண்டும் என்னும் விளக்கம் இந்நூலாற் பெறப் படுகின்றது

" சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் என்றமையால்
சார்புணர்தல் தானே தியானமுமாம்—சார்பு
கெடவொழுகின் நல்ல சமாதியுமாம் கேதப்
படவருவ தில்லைவினைப் பற்று " செ. 34

" வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை என்றமையால்
வேண்டினஃ தொன்றுமே வேண்டுவது-வேண்டினது
வேண்டாமைவேண்டவருமென்றமையால் வேண்டிடுக
வேண்டாமை வேண்டுமவன் பால் "

என்பவை திருக்குறள் பொதுமறையாகக் கருதப்பட்டமை யைக் காட்டும்.

ஏகனுகி இறைபணி நிற்கும் நிலையில் முதல்வனுக்கும் உயிர்க்கும் உள்ள பிரிப்பால் சம்பந்தத்தை 'அத்துவிதம்' என உபநிடதத்து எழுந்த சுருதிகொண்டு சாதிக்காமல், திருஞான சம்பந்த மூர்த்தி நாயனுர் அருளிச் செய்த "ஈருய் முதலொன்ருய்" என்னும் தேவாரங்கொண்டு முதல்வன் எல்லாமாய், வேருய், உடனுதலை என்றுங் கடனு யிருக்கின்ருனென்று காட்டி விளக்குவது, தேவாரம்முதலிய அருள் நூல்களின் உயர்வு உணர்ந்து உய்தற்குக் கருவி யாய் உள்ளது.

" நங்கையினுல் நாமனைத்தும்
செய்தாற்போல் நாடனைத்தும்
நங்கையினுற் செய்தளிக்கும்
நாயகனும் " செ. 78.

" அன்பேயென் னன்பேயென் றன்பால் அழுதரற்றி
அன்பே யன்பாக அறிவழியும் — அன்பன்றித்
தீர்த்தம் தியானஞ் சிவார்ச்சனைகள் செய்வதெல்லாம்
சாற்றும் பழமன்றே தான் " செ. 79,

" கடல் அலைத்தே ஆடுதற்குக் கைவந்து நின்றும்
கடலளக்க வாராதாற் போலப் — படியில்
அருத்திசெய்த அன்பரைவந் தாண்டதுவும் எல்லாம்
கருத்துக்குச் சேயனுய்க் காண் " செ. 80.

என்பனபோன்று வரும் பாட்டுக்களெல்லாம் அரிய கருத் துக்களைக் கொண்டுள்ளவை.

திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார் என்பவற்ருேடு சிவஞானபோதம் சிவஞானசித்தியார் என்பவற்றைப்

புடைபட வைத்து நோக்குவார்க்கு மெய்கண்ட தேவர் காலத்திற்கு முன் உண்மை அநுபவம் ஒன்றற்கே பெருமை யிருந்தமையும் தெள்ளிதிற் புலனும்.

## சிவஞான போதம் :

இனி, மெய்கண்டதேவ நாயனுர் அருளிச் செய்த 'சிவ ஞான போதம்' என்னும் ஞான நூலே எல்லாவற்றுள்ளும் தலையாயது. காப்புச் செய்யுளும் அவையடக்கமுமாய பாயிரத்தை நூலின் அகத்துறுப்பாகக்கொண்டு பன்னிரண்டு சூத்திரங்களால் அறிவு நூல்களின் முடியெல்லாம் தன்னகத்தடக்கிக் காட்டுவது. இறை, உயிர், தளை என்னும் முப்பொருள்களுக்குப் பெத்தத்தினின்ற நிலைபற்றிக் கூறும் பொதுவியல்பைப் பிரமாணம் இலக்கணம் என்பவற்றுன் முன் ஆறு சூத்திரங்களாலும், முத்தியினின்ற நிலைபற்றிக் கூறும் உண்மையியல்பை, சாதனம், பயன் என்பவற்றுன் பின் ஆறு சூத்திரங்களானும் உணர்த்துகின்றது.

காப்புச் செய்யுளால் ஆல்நிழல் அமர்ந்து முதனூல் அருளிய முதல்வனே ஈண்டைக்கு இறைவன் என்பது உணர்த்தப்படுகின்றது.

அவையடக்கச் செய்யுளால் உயிரின் இயல்பை உணர்ந்தோர்க்கே முதல்வனியல்பு உணரவரும் என்பதும், அங்ஙனம் முதல்வனைத் தலைப்பட்டுணர்ந்த அருட்டிருவாளர்களே கடவுள் நெறியின் முடிநிலை முடிபுகளைப் பொருந்துமாறு உணரவும் உணர்த்தவும் வல்லவர் என்பதும் ஏனையர் அத்தன்மையர் அல்லர் என்பதும் உணர்த்தப் படுகின்றன.

1. பொதுவியல்:

முதற் சூத்திரம் - உலகினை ஆக்கிக் காத்து ஒடுக்கும் ஒரு முதல்வன் உளன் என்பதும், அவன் எல்லாவற்றை-யும் ஒருங்கே ஒடுக்கி ஒருங்கே தோற்றவல்ல பரமசிவனே என்பதும் உணர்த்துகின்றது.

இரண்டாஞ் சூத்திரம் - முதல்வன் உயிர்களோடு அவையேயாய் வேருய் உடனுய் நின்று அவை தாம் முற் செய்வினைக்கேற்ப ஐந்தொழிலிற்பட்டு நடக்குமாறு செய்-வன் என்பதும், தானும் தன் சக்தியும் எனத் தன்னுள் இரு வேறு வகைப்பட வைத்து உலகினை நடாத்துவன் என்பதும் உணர்த்துகின்றது.

மூன்ருஞ் சூத்திரம் - உயிர், சூனியம், தூல உடம்பு, ஐம்பொறி, சூக்கும உடம்பு, பிராணன், பிரமம்; கருவி களின் சமுதாயம் என்பவற்றின் வேருய் நான் என்னும் உணர்வுக்கு விடயமாய் உளது என உணர்த்துகின்றது.

ஆணவ மலத்தின் உண்மை முதற் சூத்திரத்தும், இரு-வினைக்கும் அவற்றுக்குப் பற்றுக்கோடாகிய மாயைக்கும் உண்மை இரண்டாஞ்சூத்திரத்தும்உணர்த்தப்படுகின்றன.

நான்காஞ் சூத்திரத்து உயிர் ஆணவமலத்தாற் பிணிப் புண்டு ஐந்தவத்தைப்படும் இயல்பிற்று என அதன் பொது-வியல்பு உணர்த்தப்படுகின்றது. உயிர் அந்தக்கரணங் களின் வேறென்பதும் இதன்கண்ணே உணர்த்தப்படு கின்றது.

ஐந்தாஞ் சூத்திரம் முதல்வன் உயிர், தன்னை உணராது அவத்தும் அதன் உணர்விற்கு முதலாய் நின்று உணர்த்தி வருகின்ருன் என்பது உணர்த்துகின்றது.

ஆறாஞ் சூத்திரம் முதல்வன் உயிரான் அளந்தறியப் படான் எனவும், அதனால் அவன் சித்துப்பொருள் என்பதும் பெறப்படும் எனவும், அவனை ஒருவாற்றானும் உணரப்படான் என்றல் தவறெனவும், அவன் ஒற்றித்து நின்றுணரும் அநுபவஞானத்திற்கு விடயமாகுதலின் சத்தெனவும் இவ்வாற்றான் முதல்வன் சிவசத்தெனவும் உணர்த்துகின்றது. சிவசத் – சித்துச்சத்து.

## 2. உண்மையியல் :

ஏழாஞ் சூத்திரம் உயிர் அசத்தை அசத்தால் அறிந்து அசத்தின்கண் உளதாய் இப்பெத்த நிலையில் வருதல் போலவே முத்தியில் சத்தைச் சத்தால் அறிந்து சத்தின்கண் உள்ளதாய் விளங்கும் எனவும் ஆதலினால் " நான் உடம்பு " என்னும் உணர்வு விபரீதவுணர்வாதல் போலவே " நான் பிரமம் " என்னும் அகம்பிரமஞானமும் விபரீதவுணர்வே எனவும் விளக்குகின்றது.

எட்டாஞ் சூத்திரம் முத்திக்குச் சிறந்த சாதனம் ஞானம் எனவும், அது முதல்வன் குருவாய் வந்து உணர்த்த உணரப்படும் எனவும், முதல்வன் குருவாய் வருவதற்கு உண்மைச் சரியை கிரியா யோகங்களைச் செய்து வரல் வேண்டும் எனவும் உணர்த்துகின்றது.

ஒன்பதாஞ் சூத்திரம் முதற் பொருள் பாச ஞானத்தாலும் பசு ஞானத்தாலும் அறியப்படான் எனவும், பாசம் யாவும் அநித்தம் என்று விட்டு " நான் யார் " எனச் சிந்தித்துணரின் அவ்வுயிர்க்கண் சிவஞானம் உலகிற்கு இலக்கணமாய்த் தோன்றும் எனவும் அச் சிவஞானத்தில் பதியை உயிரின்கண் நாடுக எனவும், அந்நிலை நெகிழாதிருக்க எனவும் உணர்த்துகின்றது.

பத்தாம் சூத்திரம் மேலும் பெத்தத்தில் அவனிவனுய் நின்ற முறை இவன் அவனும் ஏகனுகி இறைபணி நிற்க மும்மலங்களும் பற்றறக் கழியும் எனப் பாச வீடு கூறுகின்றது.

பதினொன்ருஞ் சூத்திரம் முதல்வன் பெத்தம் முத்தி இரண்டினும் உயிர்க்குயிராய் நின்று உணர்த்தியும் உணர்ந்தும் வரும் பேருபகாரத்தினை ஏகனுகி இறைபணி நிற்கும் ஆன்மா மறவாது உணரின் முதல்வன்மீது இச்சை மீதூர்ந்து நிற்கும் எனவும், இச்சை மீதூர்தலாகிய அவ்வன்பே இன்பமாய் முதல்வன் வெளிப்பட அவனில் அழுந்தி நிற்றலே பரமுத்தி நிலையெனச் சிவப்பேறு கூறுகின்றது.

பன்னிரண்டாஞ் சூத்திரம் அணைந்தோர் தன்மை கூறுகின்றது. அணைந்தோராகிய சீவன் முத்தர்க்கு மெய்யுணர்வின் நிலைபெறலும் மெய்யன்பர் கூட்டுறவும், திருவேடத்தையும் திருக்கோயிலையும் முதல்வன் எனவே தெளியக் கண்டு வழிபடுதலும் சிவப்பேற்றினை நிலைபெறுத்தும் சாதனங்களாம் என்பதை உணர்த்துகின்றது.

சிவஞான சித்தியார் :

இனிச் சிவஞான சித்தியார் என்னும் நூல் சிவஞான போதத்தின் வழிநூல். புறச் சமயங்களின் நிலை இது என அளவிட்டுக் காட்டும் பரபக்கமும், சித்தாந்த சைவத்தின் மெய்ப்பொருள் விளக்கும் சுபக்கமும் என இரு பெரும் பகுதிகளையுடையது. சிவஞான போதத்தின் அவையடக்கத்துட்போந்த "தம்மையுணரார் உணரார், உடங்கியைந்து தம்முட் — புணராமை கேளாம்புறன்" என்னும் பகுதியே பரபக்கம் என 311 திருவிருத்தத்தால் விரித்துரைக்கப்பட்டது.

1. பரபக்கம் :

பரபக்கத்துள் மதமும் மறுப்புமாக வைத்து அளவிட்டு உரைக்கப்பட்ட சமயங்கள் உலகாயதம், சௌத்திராந்திகம், யோகாசாரம், மாத்துமிகம், வைபாடிகம் என நால்வகைப் பௌத்தம்; நிகண்டவாதம் ஆசீவகம் என இருவகைச் சமணம்; பட்டாசாரியன் மதம் பிரபாகரன் மதம் என இருவகைப்படும் மீமாஞ்சை; சத்தப்பிரம வாதம், கிரீடாப்பிரம வாதம், பாற்கரிய வாதம், மாயா வாதம் என நால்வகைப்படும் ஏகான்ம வாதம், சாங்கியம், பாஞ்சராத்திரம் என்பன.

2. சுபக்கம் :

சுபக்கம் 328 திருவிருத்தங்களை யுடையது. சிவஞான போத சூத்திரங்களை ஒட்டி அவற்றின் பொருளைச் சிந்தித்து உணர்வதற்கு ஏதுவாய் ஆண்டாண்டு தெரிந்துணர்த்தியும் தடை விடை செய்தும் தர்க்க சடிலமாய் நடப்பது. இதனால் விளையக்கூடிய அனுபவப் பயனைத் திருவுளங்கொண்டு தருமையாதீன முதற் பரமாசாரியசுவாமிகளாகிய ஸ்ரீ குருஞானசம்பந்தர்,

" பாரிலுள்ள நூலெல்லாம் பார்த்தறியச் சித்தியிலே
ஓர்விருத்தப் பாதி போதும் "

என்றருளிச் செய்தமையானும் தமது அருண் மரபில் வருவோர்க்கு இதனையே முதன்மையான உபதேச நூலாக வைத்தமையானும் இதன் பெருமை அளப்பரிது.

ஆசிரியர் சிவஞான முனிவரும் இதனையுற்று, " சிவஞானசித்தி சிவாகமங்களுக்கெல்லாம் உரையாணியெனச் செய்யப்பட்டு நிலவுவது " என விதந்து கூறுவராயினர்.

" என்னையிப் பவத்திற் சேரா
வகையெடுத் தென்சித் தத்தே
தன்னைவைத் தருளினாலே தாளிணை
தலைமேற் சூட்டும்
மின்னமர் பொழில்சூழ் வெண்ணெய்
மேவிவாழ் மெய்கண் டானூல்
சென்னியிற் கொண்டு சைவத்திறத்தினைத்
தெரிக்க லுற்றும் "

என நூல்வழி கூறுமிடத்து மெய்கண்ட முதல்வரால் அருளிச் செய்யப்பட்ட ஞான நூல் ஏனைப் பிரமாண நூல் எல்லாவற்றுக்கும் சிரத்தானமாகக் கொள்ளற்பாலது எனச் சிறப்பித்தது கருதற்குரியது.

எட்டாஞ் சூத்திரத்து முப்பதாந் திருவிருத்தத்தின் முதற் பாதி,

" அறியாமை அறிவகற்றி அறிவி னுள்ளே
அறிவுதனை அருளினா லறியாதே அறிந்து
குறியாதே குறித்தந்தக் கரணங்களோடும்
கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாயின் "

என்பது இதன்கண் உலகச் சார்பு தொலைதற்கேதுவாகிய பாச நீக்கமும் திருவருளினாலே மெய்ப்பொருளைக் கேட்டுச் சிந்தித்துத் தெளியும் நிலையும் இனிது விளக்கப்படுதல் காண்க.

## இருபா இருபஃது :

இந்நூல் வெண்பா ஆசிரியப்பா என்பவற்றால் இரட்டைமணி மாலை போல இருபது செய்யுட்களால் அந்தாதித் தொடையமைய இயற்றப்பட்டது. இது மெய்கண்ட தேவரை முன்னிலைப்படுத்தி வினவும் முகத்தால் சித்தாந்த உண்மைகளையும் ஆசிரியரது (அருணந்தி சிவாசாரியரது) சிவானுபவத்தையும் தெளிவுபடுத்துவது.

**உண்மை விளக்கம் :**

இது ஐம்பத்துமூன்று வெண்பாக்களாலாயது: மெய்கண்ட சந்தான அனுபவத்திரட்டு எனச் சிறப்பித்துரைக்கப்படுவது. முப்பத்தாறு தத்துவம், ஆணவம், இருவினை, ஆன்மா, கடவுள், ஐந்தெழுத்து என்பவற்றின் இயல்பைச் சுருக்கமாகவும் விளக்கமாகவும் உரைப்பது. ஆசிரியர், மெய்கண்ட தேவரை வினவ, அவர் விடை சொல்லி வரும் முறையில் ஆக்கப்பட்டது.

**சிவப்பிரகாசம் :**

இனி, உமாபதி சிவாசாரியாரியற்றிய எட்டு நூல்களுள் சிவப்பிரகாசம் சிவஞானபோதத்தின் சார்பு நூலாகும். பாயிரத்துள் திருக்கயிலாய பரம்பரையில் வரும் ஆசிரியர்கள் இன்னார் என்பதும், சைவ நூல்களின் இயல்பும் தீக்கை முறைகளும் சுருக்கமாகக் கூறப்படுகின்றன. 'புறச் சமயத்தவர்க் கிருளாய்' என்னும் ஒரு செய்யுளால் சித்தாந்த சைவத்தின் சிறப்பியல்பை இனிதெடுத்து இயம்புகின்றார்.

"தொன்மைய வாம்எனும் எவையும் நன்றாகா;
இன்று தோன்றிய நூல்எனும் எவையுந் தீதாகா"

என்னும் அவையடக்கப்பகுதி உண்மைதெரியும் முறையை நன்கு விளக்குதல் காண்க. இது 100 திரு விருத்தங்களாலாயது.

**திருவருட் பயன் :**

"திருவருட் பயன்" என்னும் அழகிய இந்நூல் திருவள்ளுவர் நூல்போலப் பத்துக் குறள் வெண்பாக்களாலாகியது; பத்து அதிகாரங்களை யுடையது.

பதிமுதுநிலை, உயிரவைநிலை, இருண்மலநிலை, அருளதுநிலை, அருளுருநிலை, அறியுநெறி, உயிர்விளக்கம், இன்புறுநிலை, ஐந்தெழுத்தருள்நிலை, அணைந்தோர் தன்மை என்பது இதன்கண் உள்ள அதிகாரங்கள்.

## வினா வெண்பா :

பதின்மூன்று வெண்பாக்களால் ஆயது வினாவெண்பா. உமாபதி சிவாசாரியர் தமது ஆசிரியரை வினாவு முறையால் சாத்திர உண்மையை விளக்குவது.

> காண்பானுங் காட்டுவதும் காண்பதுவும் நீத்துண்மை
> காண்பார்கள் நன்முத்தி காணார்கள் —காண்பானும்
> காட்டுவதுங் காண்பதுவும் தண்கடந்தைச் சம்பந்தன்
> வாட்டு நெறி வாராதவர். (செ. 11)

என்பது சுத்தாத்வைத சித்தாந்த முத்தியினியல்பை நன்கினிது கிளத்தல் காண்க. ஞானம் ஞேயம் ஞாதுரு எனப் பகுத்துணர்வார்க்கும் அனுபவ நிலை வரவில்லை; அவை ஆண்டு இல்லை யென்பாரும் முத்திநிலையை அனுபவித்தவர் அல்லர் என்றல் காண்க.

## போற்றிப் பஃறொடை :

" போற்றிப் பஃறொடை " என்னும் நூல் பஃறொடை வெண்பாவால் ஆயது. ஆசிரியனைப் போற்றுமுகத்தால் உயிர் 'தன்னுண்மை' எனப்படும் கேவலத்தினின்றும் சகல நிலையடைந்து பக்குவ முதிர்ச்சியடைந்து, ஞானாசிரியரால் சுத்த நிலை யெனப்படும் பரமுத்தி நிலையினைத் தலைப்படுமாற்றை விளக்குகின்றது.

கொடிக்கவி :

தில்லையிலே கொடியேறும் பொருட்டுப் பாடப்பட்டது. இக் "கொடிக்கவி" ஞானதீக்கையின் பயன் உணர்த்துவது. ஒரு கட்டளைக் கலித்துறையினையும் நான்கு வெண்பாக்களையும் உடையது. திருவைந்தெழுத்தின் பேதமும் பொருளும் மருளற உரைப்பது.

நெஞ்சுவிடுதூது :

நெஞ்சுவிடுதூது ஆசிரியர் தமது திருவுள்ளத்தை மறைஞான சம்பந்தர்பால் மாலை வாங்கி வரும்படி தூதாக அனுப்புமுகத்தான் பன்னூற் பொருண்முடிபையும் இனிது விளக்கிக் கலிவெண்பாவாற் செய்தது.

" பல்கருவி
வாரில் அகப்பட்டு மயங்கினேன்—தேருங்கால்
உன்னை யொழிய உறவில்லை யென்னுமது
தன்னை அறிவைத் தனியறிவை—முன்னம்
தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றையவர் என்று—நிலத்தமிழின்
தெய்வப் புலமைத் திருவள்ளுவர் உரைத்த
மெய்வைத்த சொல்லை விரும்பாமல்—ஐவர்க்கும்
ஆவனவே செய்தங் கவர்வழியைத் தப்பாமற்
பாவமெனும் பௌவப் பரப்பழுந்தி "

எனத் துறவு நிலையை வற்புறுத்துதல் காண்க.

உண்மை நெறி விளக்கம் :

உண்மைநெறி விளக்கம் என்பது தத்துவ உருவம், தத்துவக் காட்சி, தத்துவ சுத்தி, ஆன்ம உருவம், ஆன்மக் காட்சி, ஆன்மசுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம்,

சிவ போகம் என்னும் பத்துக் காரியங்களால் உயிர் இறை வன் திருவடியைத் தலைக்கூடும் ஞான நெறிக்குட்படும் அநுபவங்களை எடுத்துரைப்பது. இது உமாபதி சிவாசாரி யரால் இயற்றப்பட்டதெனக் கொள்ளுதல் மரபு. புது ஆராய்ச்சி வேறு முடிபு கண்டுளது. இது சீகாழித் தத்துவ நாதர் இயற்றியதென்பது பொருத்தமாகவுள்ளது.

## சங்கற்பநிராகரணம் :

" சங்கற்பநிராகரணம் பரமுத்தியின்புறு நிலையினைத் தலைப்படும் உயிருக்கு அது நிற்கும் நெறிக்கண் ஐயமும் மருட்கையும் விளைத்து இடையூறாக நிற்கும் மாயாவாதம், ஐக்கியவாதம், பாடாணவாதம், பேதவாதம், சிவசமவாதம், சங்கிராந்தவாதம், ஈசுர அவிகாரவாதம், நிமித்த காரண பரிணாமவாதம், சைவவாதம் என்பவற்றை முறையே சங்கற் பங்களாக வைத்து அவற்றை நிராகரிக்கும் முறையில் அகவல்களால் ஆயது

சாலிவாகன ஆண்டு 1235-இல் (கி. பி. 1313) தில்லையில் கூத்தப்பிரான் ஆனிப்பெருவிழாவில் ஆரும் நாளில் அகச் சமய வழியொழுகும் ஆசிரியர்கள் எண்மரும் தேர்மண்டபத் தில் ஒருபுறம் இருந்தனர். மாயாவாதி யொருவனும் ஒரு புறம் இருந்தான். ஸ்ரீ மெய்கண்ட தேவர் அருள்பெற்ற அடியார் ஒருவர் மற்றொரு பக்கம் இருந்தனர். உண்மை உசாவுவோன் ஒருவன், " தம்பிரானார் திருவருள் நிலை எத் தன்மைத்து?" என மாயாவாதியை வினவினான். அவன் அதற்கு விடை பகர, ஏனைய எண்மரும் அதனிற் குறுக் கிட்டு ஒருவரை ஒருவர் மறுத்துரைத்தனர். அன்னோர் உரைத்தவற்றைச் சங்கற்பங்களாக வைத்து நிராகரித்து உசாவினானைத் தமது " சிவப்பிரகாசம் " கற்று உண்மை யுணரலாம் என உமாபதி சிவம் அறிவுறுக்கின்றனர்.

**துகளறுபோதம் :**

இக்காலத்து இப்பதினான்கு நூல்களே யன்றித் துகளறுபோதம் என்னும் ஞான நூலினையும் உடன்கூட்டி அச்சிட்டு வழங்குப. துகளறுபோதம் மெய்கண்டதேவர் வழிவந்த சீகாழிச் சிற்றம்பல நாடிகள் அருளிச்செய்தது. இறைவனுடன் கலக்கும் ஞானநெறியைப் பூதப்பழிப்பு முதல் பரமானந்த அவசம் வரை முப்பது அவதரத்தில் வைத்து விளக்குவது. இம்முப்பதவதரமும் பாச அவதரம் ஏழும், பசுவவதரம் பதினைந்தும், பதியவதரம் எட்டும் என வகை செய்யப்படும். இவை முப்பதும் உண்மைநெறி விளக்கம் கூறும் தசகாரியமாய் அடங்கும் எனச் சிந்தனையுரை கூறும். மேலும் உண்மைநெறி விளக்கம் துகளறு போதத்தின் வழி நூல் எனவும் பகரும். இவையெல்லாம் உணராது துகளறுபோதத்திற் கூறியவை அவதரம் எனப்படுதலின் காரியமாகா எனவும் அவை சிவயோகம், சிவ போகம் என்பவற்றின் நிகழ்வன எனவும் தமக்கு வேண்டிய வாறே உரைப்ப. துகளறுபோதம், ஆசிரியர் சிவஞான முனிவரால் பல விடங்களில் மேற்கோளாக ஆளப்படு கின்றது.

இப்பதினைந்தும் சித்தாந்தஞானம் பெற விழைவோர் யாவராலும் ஓதியுணர்தற்பாலன.

சித்தாந்தத் தேசீவன் முத்திசித் தித்தலால்
சித்தாந்தத் தேநிற்போர் முத்தி சித்தித்தவர்
சித்தாந்த வேதாந்தம் செம்பொரு ளாதலால்
சித்தாந்த வேதாந்தம் காட்டும் சிவனையே.

— திருமந்திரம்.



உ
குருபாதம்

# தருமையாதீனக் குருபரம்பரை

## ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள் வரலாறு

ஆலந் தரித்தலிங்கம் ஆலவாய்ச் சொக்கலிங்கம்
மூலமாய் எங்கும் முளைத்தலிங்கம் — பாலொளியாம்
மத்தனே கூடல் மதுரா புரிஉமையாள்
அத்தனே ஆலவா யா.

— குருஞானசம்பந்தர்.

### கோயில் மணி ஒலித்தது :

சற்றேறக்குறைய ஐந்நூறு ஆண்டுகளுக்கு முந்திய காலம்; மரங்களும், செடிகளும், புதர்களுமாக மண்டிக் கிடக்கும் பெருங்காடு அது. எங்கும் ஒரே மரச்செறிவு. சிள்வண்டின் ரீங்காரம் செவியைச் செவிடாக்கிவிடும்போ லிருக்கிறது. வன விலங்குகள் ஓடித்திரிகின்றன. கொடிய விலங்குகள் குமுறுகின்ற பகுதி. காட்டின் இடையில் காவிரி அன்னை பாய்கின்றாள். எங்கும் அமைதி குடிகொண் டிருக்கும் அந்தக் காடு, திருமயிலாடுதுறைக்குக் கிழக்கே இருக்கும் காடு. காவிரிக்கரையில் அமைந்த அக்காட்டுப் பகுதியில் கோயில் மணி ஒலிக்கின்றது. மங்கல வாத்தி யங்கள் முழங்குகின்றன. கற்பூர மணம் பரவுகின்றது. பிரணவநாதம் காற்றிலே மிதந்துவருகிறது. ஆம்!

எங்கும் தெய்வமணம். அறவடிவமாகி விளங்கும் தருமபுரீசுவரர் சிவலிங்க வடிவில் "வில்வமரத்தினடியில் வீற்றிருக்கிறார். சுற்றிலும் சில முனிவர்கள் மோனத்தவமிருக்கும் சிவஞானக் காட்சி. அகத்திய முனிவர் தருமபுரீசரின் தண் திருவடிகளை மலரிட்டு விரும்பி நல் விளக்குத் தூபம் விதியினால் இட்டு வழிபட்டுக்கொண்டிருக்கிறார். அந்தப் பூசையிலிருந்து வெளிப்படும் அருள் வெளிப்பாடே அக் கானகம் முழுதும் மணக்கிறது.

திருவருள் ஆட்சி :

ஒருநாள் அகத்திய முனிவரின் சீடர்கள்முன், ஓர் இளந்துறவி வந்து பெருமானை வழிபடுகிறார். அகத்திய முனிவரின் சீடர்களது இதழ்கள் குறுமுறுவல் புரிகின்றன. விழிகள் மலர்கின்றன. தம் திருக்கரத்தை உயர்த்திப் புதிய துறவியாரை வாழ்த்துகிறார்கள். இந்தக்காலத்தைத்தானே அவர் எதிர்நோக்கியிருந்தார்! அகத்திய முனிவர் அருள் வெளிப்பாட்டால் அப்புதிய துறவுச்செல்வர் அங்கே அமர்கிறார். அவரதுவழி நிற்கும் சீடர்கள் பெருகுகின்றனர். அவர்தம் அருளாட்சி அக்கானகமெங்கும் பரவுகின்றது. காவிரிக்கரையிலே அருட்செல்வம் புதுமலர்ச்சியோடு திருவீற்றிருக்கின்றது. கானகமெல்லாம் ஞானசம்பந்தம் பெற்றுத் துலங்குகின்றன. தருமபுரீசுவரர் திருவருள் அங்கிருந்து வையக மெல்லாம் பொங்கி வழிகிறது. எங்கும் திருவருள்! எங்கும் குருவருள்! அகத்திய முனிவரின் சீடர்கள் ஆனந்தமடைகின்றனர். பலப்பல சித்திகளை உபதேசித்து, ஆட்சியை அவ்வருளாளரிடம் ஒப்படைத்துத் தம் இருப்பிடம் செல்கின்றனர்.

புலியும் பசுவும் ஒரு துறையில் நீர் உண்டு காவிரிச் சோலையில் களித்து விளையாடுகின்றன. கொல்லுங்குணமுடைய விலங்குகள் அனைத்தும் கொடுமை தவிர்ந்து

அருட்குணம் அடைகின்றன. உலகம் காணாத புதுமை, தருமபுரீசுவரர் அருள் நிழலில் காவிரிக்கரைக் கானகத்திலே. இதுவன்றோ திருவருள் திறம் என்று தேவரும் யாவரும் வியந்துநிற்கின்றனர்.

இந்த அருளாளர் யார்? ஞானச் செல்வத்தால் அஃறிணை உயிர்களையும் அன்புலகுக்கு அழைத்துச்சென்று பெருமான் திருவடி இன்பவெள்ளத்துள் திளைக்கச்செய்த இத்திருவுடைய பெருமகனார் யார்? அகத்திய முனிவரின் சீடர்களாலும் வியக்கப்பெற்ற இவ்வித்தகர் யார்? தம் திருவருள் தேக்கத்தால் உலகை அன்புமயமாக்கிய இவ்வனுபவச் செல்வர் யார்?

சொக்கநாதர் திருமுன் :

சீவில்லிபுத்தூரிலே சுப்பிரமணிய பிள்ளை என்ற சிவநேசச் செல்வருக்கு, மீனாட்சியம்மை என்ற மெல்லியலார் திருவயிற்றிலே சோமவாரத்தன்று அவதரித்தது ஒரு குழந்தை. பதினாறு வயதுக்குள் படிக்கவேண்டியன தெளிந்த தெய்வீகக் குழந்தை அது. சுப்பிரமணியப் பிள்ளைக்கு, ஆலவாய்ச் சொக்கன் அருங்குலதெய்வம் – பதினாறுண்டுத் திருமகன் ஞானசப்பந்தனோடு – ஆம்; அதுதான் அச்செல்வனுக்குப் பெற்றோரிட்ட திருப்பெயர். மனைவி உடன்வர, மதுரை சென்றார்; பெருமான் திருமுன் மனமுருகிநின்று வழிபட்டார். ஞானசம்பந்தர் கண்மூடி நின்று கண்ணுதலானைக் கைகூப்பி வழிபட்டுக் காதலாகிக் கசிந்து உருகிநின்றார்.

தந்தையும் தாயும் செல்வப்புதல்வன் சிவனடிமைத் திறத்தை எண்ணி மகிழ்ந்தனர். காத்திருந்தனர்; புதல்வனை வழிபாடு முடிந்தபின் தம்முடன் ஊர்க்கு அழைத்துச் செல்ல. ஆனால் ஞானசம்பந்தர் சிந்தை ஊனசம்பந்தம்

பெற்றிருந்தால்தானே! மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்து, சொக்கநாதப்பெருமான் திருவடியின்பத்திலே சொக்கித் திளைத்து அயர்ந்துநின்றது.

ஐந்துபேரறிவும் கண்களே கொள்ள
அளப்பருங் கரணங்கள் நான்கும்
சிந்தையேயாகக் குணமொரு மூன்றும்
திருந்துசாத் துவிகமே யாக
இந்துவாழ் சடையான் ஆடும் ஆனந்த
எல்லையில் தனிப்பெருங் கூத்தின்
வந்தபேரின்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார். —சேக்கிழார்.

அன்னையார் அழைப்பு அவர் செவியில் விழவில்லை; அன்னை பராசக்தியின் அன்பழைப்புத்தான் அவர் செவியில் விழுந்தது. தந்தையின் தவிப்பு அவர்க்குப் புலனாகவில்லை; உலகத் தந்தையான ஆலவாய்ச்சொக்கன் அருள் உவப்புத்தான் அவர்க்குப் புலப்பட்டது. நினைவுமீண்டபோது, 'என் உடலுக்கு அன்னையும் அப்பனுமாகிய உங்களோடு நான் வருவதெப்படி?' 'என்னுயிர்க்குத் தலைவனும் தலைவியும் அதோ, சொக்கநாதப்பிரானும் அங்கயற்கண்ணியுமல்லவோ' என்று உதிர்ந்தன சொல்மலர்கள். கலங்கினர் தாய்தந்தையர்; தவமிருந்து பெற்ற மதலையைப் பிரிந்து தவிப்பதா? தேறுதல் கூறி அனுப்பிவிட்டார்; தெளிந்துவிட்ட ஞானசம்பந்தர். அப்பெருந்தகையின் மனம் அருளியலாந் திருவடி இன்பம் ஒன்றிலேயே வட்டமிட்டுச் சுழன்றது.

### அருள்வாக்கு உதித்தது :

ஞானசம்பந்தர் நாள்தோறும் பொற்றாமரைத் தீர்த்தத்தில் நீராடி இறைவனை வழிபட்டுவந்தார். நாடோறும்

தீர்த்தக்கரையில் சிவனடியார் பலர் அமர்ந்து சிவபூசை செய்யும் காட்சிகளைக் கண்டு தாமும் அங்ஙனமே பூசை செய்யப் பெருவிருப்பம் கொண்டார். என்செய்வது? பூசனைபுரியப் பெருமான் திருவுருவேண்டுமே! விருப்பத்தை நிறைவேற்ற வல்லவனை வேண்டினார். கனவிலே எழுந்தருளினான் கனியினும் இனிய தமிழ்ச் சொக்கன். பொற்றாமரைக் குளத்து ஈசானமூலையில் கங்கையுள் இருப்பதாகவும், எடுத்துப் பூசைசெய்து இன்புறுமாறும் அருள்வாக்கு உதித்தது.

## கண்ணுதலோன் கரத்தில் வந்தமை :

மறுநாள் காலை ஞானசம்பந்தர் மகிழ்ச்சிக் குளத்தில் முழுகியெழுந்தவர் பொற்றாமரைக் குளத்திலும் மூழ்கினார். என்ன வியப்பு! ஈசானமூலையில் இருந்தான் இறைவன். கரத்திலெடுத்த அடியவர் மனம் களித்தது; கூத்தாடியது; களிமனம் துள்ளியது; தமிழ்ப் பாடல் முதன்முதல் திருவாயில் உதித்தது. 'கண்ணுக்கினிய பொருள்!' 'துள்ளுகின்றது உள்ளம்!' 'என் கரத்தில் வந்தாய்!' 'என்ன பெருமிதம்!' 'விண்ணவரும் பரவும் அற்புதம்!' 'என்னே நின்விச்சை!' 'ஆனந்த பரவசமிடுகிறது நெஞ்சு!' 'என்னையும் நின் குறைவிலா நிறைவாம் கடலில் நண்ணும்படி செய் சொக்கநாயகனே!' என்று வேண்டி உருகுகிறார். சொக்கநாதக் கலித்துறை என்ற அருட்பனுவல் திருவாயில் விளைந்து மலர்கிறது. அருள் வெளிப்பாடு; அருள் வெளிப்பாட்டின் அடிப்படையில் ஆனந்தபரவசம். அப்பரவசப் பாமாலை – ஆம்! இவையே சொக்கநாதக் கலித்துறை. 'பெருமான் கிடைத்துவிட்டான்; இனிக் குருநாதன் வேண்டுமே!' என்ற கவலை அடுத்தது. வேண்டத்தக்கது அறிவோன், வேண்ட முழுதும் தருவோன் அல்லவா பெருமான்! திருவாரூர் சென்று தமது உபதேச பரம்

பரையில் வந்த ஞானப்பிரகாச தேசிகரிடத்தில் ஞானோபதேசம் பெற அருளிப்பாடு பிறந்தது. பறந்தது ஞானசம்பந்த குணக்குன்று. அருள் விளையாட்டை யாரே அறிவார்? ஆரூர் ஞானப்பிரகாசர் கனவிலும் ஞானசம்பந்தர் வருகை முன்பே உணர்த்தப்பட்டது. காத்திருந்தார் கமலையிலே, அக்கனிவுடையார்.

## கமலையில் :

அன்று சோமவாரம். கமலை ஞானப்பிரகாசர் சீடர் வருகை நோக்கி மலர்ந்து வீற்றிருக்கின்றார்; எங்கு? சித்தீச்சரத்தில் தென்முகப்பெருமான் திருமுன்பு. ஞானநெறியை 'அன்றாலின் கீழிருந்து' உரைத்த ஞானநாதன் திருமுன்பு. காந்தம் கண்ட இரும்புபோல் ஞானசம்பந்தர் சித்தீச்சரத்துக் குருநாதர் திருமுன் சென்றார்; பணிந்தார்; இருகண்ணீர்வார இன்புற்றார். திருவருள் நோக்கத்தால், சிவஞான உபதேசம் பெற்றார் சீடர். பூசை எழுந்தருளி வித்துக் கொடுக்கப்பெற்றார். சொக்கநாதப்பெருமானை வழிபட்டார்; நெஞ்சு கனிந்து வழிபட்டார். தமிழ்க்கவி தழைத்தது; மனம் நிறைந்த ஞான அனுபவம், சொக்கநாத வெண்பாவாக மலர்ந்தது. குருநாதன் திருவடியில் நறுந்துணர் சாத்தினார். அதுவே 'ஞானப்பிரகாசமாலை' என்னும் நன்னூல்,

ஞானப் பிரகாசன் கமலையில் வாழ்குரு நாதன்சொன்ன
மோனப்ரகாசத்தைக் கேட்டஅன்றே நெடு மூச்சலைவற்று
ஊனப்ரகாசச் செயலற்று என் உள்ளம் உருகியென்றும்
வானப்ரகாசத்து நேயத்திலே சென்று மண்டியதே.

— ஞானப்பிரகாசமாலை.

மனக்கவலை தீர்ந்தது; தனக்குவமை யில்லாதான் தாள்சேர்ந்த பெரும் பேறே யன்றோ அது!

**ஒருநாள் நிகழ்ந்தது :**

ஒருநாள் திருக்கோயில் வழிபாட்டுக்குப்பின் இல்லம் திரும்பும் ஞானப்பிரகாசர் திருமுன் ஏவலர் இன்மையின் தாமே கைவிளக்கேந்திச் செல்லுகின்றார் ஞானசம்பந்தர். மனைவாயிலில், 'நிற்க' என்ற ஒரு சொல் கூறி மனையுட் புகுகின்றார் குருநாதர். நள்ளிரவு நேரம்; ஆசான் உரைத்தபடி நின்றார்.

இரவில் மழை கொட்டுக்கொட்டென்று கொட்டியது. ஞானசம்பந்தர்மேல் ஒரு துளிகூடப் படவில்லை. ஆகா! இதுவல்லவா திருவருள் ஏற்றம்! விடியற்காலம் சாணம் தெளிக்கவந்த குருபத்தினியார் வியந்து நிற்கின்றார். ஓடோடிச் சென்று கணவரிடம் உண்மை உணர்த்துகிறார்.

**தருமையில் தவ அரசு ;**

குருநாதர் தம்சீடர் அருள்நிலை கைவரப் பெற்ற காட்சியைக் கண்டு களித்து, "நீர் அருளொளி வழங்கும் குருநாதராகிவிட்டீர்" என்று அருளி, வேண்டியவிடத்திற் சென்று தங்கிச் சிவஞான உபதேசம் புரிந்து வாழுமாறு கூறுகின்றார். ஞானசம்பந்தர் மனம் துணுக்குறுகிறது. குருநாதன் திருவடித் தொண்டை விட்டுப் பிரிந்து வாழ்வதா? குமுறுகிறது உள்ளம். அடியேன் எவ்வாறு பிரிவேன்? குருநாதர் அருளாணையை மீற நான்யார்? ஆம் எனக்கென்று சுதந்திரம் ஏது? 'பொதிக்கும் எருதுக்கும் தன்னிச்சை உண்டோ! இவை ஞானசம்பந்தர் திருவுளத்தி லெழுந்த எண்ண அலைகள். ஞானப்பிரகாசர் மயிலாடுதுறைக்குக் கிழக்கில் வில்வக் காடாய் விளங்கிய காவிரிக் கரையிலுள்ள தரும்புரத் தலம் சென்று அருள் தவம் பெருக்கி வாழ ஆணை தந்தருளினார்.

அருள்கனிந்த உள்ளம்: தவம் மலிந்த திருமுகம். குருஞானசம்பந்தராகிவிட்டார் அப் பெருந்தகையார்; வழிநடையாகப் புறப்பட்டார்.

தருமை வந்தடைந்து அருளாட்சி புரிந்து தவம் பெருக்கித் தருமபுரீசரை - அபயாம்பிகைத்தாயை வணங்கி ஒழுகலானார். சீவில்லிபுத்தூரில் தோன்றிய இந்த ஞானக் குழந்தை செந்தமிழ்ச் சோழநாடு செய்தவத்தால் அருளாட்சி புரிந்துவந்தது. 'சோழநாட்டிலிருந்து பாண்டி நாடு சென்று சிவம் பெருக்கினார் திருஞானசம்பந்தர், பாண்டிய நாட்டிலிருந்து சோழநாடு புகுந்து தவம் பெருக்கினார் குருஞானசம்பந்தர்' என்று உலகு வியந்து பேசலாயிற்று!

சிவசமாதி கூடுதல்:

சிவபோக இன்பத்தை - இன்ப அனுபவத்தை இனிய வெண்பாக்களால் எடுத்துரைத்தார்: சைவ சித்தாந்த முத்தி நிச்சயம் பாடியருளினார். தசகாரியங்களைப் பற்றிய இனிய ஓர் அகவலும் அருளினார்; திரிபதார்த்த ரூபாதி தசகாரிய அகவல் எனப் பெயர்பெறும் அந்நூல். சோடச கலாப் பிராசாதஷட்கம் என்றொரு நூலும் உரைத்தருளினார். தருமபுரீசர் திருக்கோயிலுக்கு மேற்கே ஒருகோயில் கட்டிச் சிவலிங்கத் திருவுருவை அதனுள் எழுந்தருளப் பண்ணினார். தமக்குப் பரிபூர்ண நிலை நெருங்கி வருவதை உணர்ந்தார். அப் பெருமான் திருவடி நிழலிற் சமாதிகூடத் திருவுள்ளம் எண்ணியது. சீடரிற் சிறந்த பக்குவமுடைய பெருந்தகையாராகிய ஆனந்தபரவசரை அழைத்தார். ஞானோபதேசம் அருளினார். அருளாட்சியை அவ்வருளாளரிடம் ஒப்படைத்துச் சிவசமாதி எய்தியருளினார்.

ஆனந்தபரவசம் :

குருநாதர் தேர்ந்தெடுத்த சீடரோ மிகவும் முதிர்ந்த திருவருட் பண்பாடு தேங்கிய அருளாளர். குருவருள் ஒன்றே அவர் குறிக்கோள்; சிவஞான மேலீட்டால் சிந்தை உருகினர். முத்திப் பெரும்பேறு தாமும் எய்தினர்.

உலகு காணுப் புதுமை :

சீடர்கள் மனம் கனிந்தனர். சிவசமாதி கூடியிருந்த குருஞானசம்பந்த சுவாமிகள் திருமுன் கல்லுங் கரைய வேண்டினர். அருள் மரபு - உபதேசமரபு வளரவேண்டுமே என்பது வேண்டுகோள். குருநாதர் மீள எழுந்தார்: அருளொளி பரப்பினர் : சச்சிதானந்ததேசிகர்க்கு அருளரசு தந்து, வைகாசித் திங்கள் கிருஷ்ணபட்சம் சஷ்டி திதியில் முத்திப் பெரும்பேறு எய்தினர். இஃது உலகம் காணுத ஒரு புதுமை.

இயேசுநாதர் தாம் புகுந்த கல்லறையினின்றும் வெளி வந்து அன்பர்களுக்கு மனக்குறை முடித்தார் என்பர்; அது வெளிநாட்டில். நம் பாரதப் பெருநாட்டில் ஞான நெறி நின்ற அருட் செல்வராகிய இவ்வாதீன முதல் குரவருக்கே இந்நிலை வாய்த்தது.

காலம் :

விஜயநகரப் பேரரசின்கீழ்ச் சிற்றரசனுகஇருந்து அச்சுதப்பநாயக்கர் என்னும் மன்னர் தஞ்சையைத் தலைநகராகக் கொண்டு ஆண்டுவந்தார். அவர் காலத்தில் ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்தரின் ஞான ஆசிரியராக விளங்கிய கமலை ஞானப்பிரகாசருக்கு சர்வமானியம் வழங்கிய செய்தி தஞ்சை

மாவட்டம் சிக்கல் திருக்கோயில் கல்வெட்டொன்றால் அறியக் கிடக்கிறது. அக் கல்வெட்டில் அச்சுதப்ப நாயக்கர் காலத்தில், கிருஷ்ணமாராசையன் என்பான் உத்தரவுப்படி, பிரதேசி முத்திரையும், கணக்கெழுத்தும் அமைத்துக் கொள்ளும்படி ஸ்ரீ ஞானப்பிரகாசருக்கு சர்வமான்யம் அளிக்கப்பட்டதாகக் குறிப்புள்ளது. அக் கல்வெட்டுத் துணை கொண்டு ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்தரின் காலத்தை ஓரளவு நிர்ணயிக்க முடிகிறது.

மேற்குறித்த கல்வெட்டு விஜயநகர மன்னன் சதாசிவ தேவமகாராயன் ஆட்சிக் காலத்தில், சக ஆண்டு 1483ல் எழுந்தது. சக ஆண்டுடன் 78ஐக் கூட்டினால் கி. பி ஆண்டு பெறப்படும். எனவே 1483+78, கி. பி. 1561 ஆகும். கமலை ஸ்ரீ ஞானப்பிரகாசருக்கு சர்வமானியம் வழங்கிய காலம் கி. பி. 1561 என்பது தெளிவாகிறது. மற்றும், ஸ்ரீ ஞானப்பிரகாசர் செய்த திருமழபாடி புராணத்தில் அந்நூல் சகம் 1488ல் பாடப்பட்டதாகக் குறிக்கப்பட்டுள்ளது. தம் நூலை ஸ்ரீ ஞானப்பிரகாசர் கி. பி. 1566இல் பாடியதாதல் பெறப்படுகிறது.

எனவே, ஸ்ரீ ஞானப்பிரகாசரின் மாணவராகிய ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்தரின் காலமும் இதனை ஒட்டியதாகவே இருத்தல் வேண்டுமென்று அறியக்கிடக்கிறது. கி. பி. 1560இல் ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்தர் தருமையில் அருளாட்சி அமைத்தருளினார்கள் எனக்கொள்வது பொருத்தமாகிறது. இவற்றால் ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்தர் 16ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் வாழ்ந்திருந்தமை பெறப்படுகிறது.

மரபு வளர்ந்தது :

இந்த மரபு வளர்ந்துவந்தது. தருமபுரம் திருமடம், திருக்கோயில் அருளாட்சி மரபு தழைத்துப்பெருகிற்று.

அருள்தவம் நிறைந்த பல அருளாளர்கள் இந்த ஆதீனத்து விளங்கினர். பல அற்புதங்கள் செய்தனர், உலகம் அவர் களால் பெற்ற பயன்களோ மிகப்பல.

அப்பெருந்தகையாளர்கள் உலகம் வாழ வாழ்ந்தனர். நினைத்தனர் : பேசினர் : எழுதினர். உலகம் வாழ்தல் ஒன்றே குறிக்கோள். சமுதாய வளர்ச்சி; சமுதாயத்தில் சமய வளர்ச்சியே அவர்களது திருவுள்ளத்தில் மேலோங்கி நின்றன.

உலக நிலைபேற்றுக்காக உளங்கனிந்தனர். நல்லன வாழ நற் பணிகள் பலபுரிந்தனர். சொக்கநாதர் வழி பாட்டைக் காலந்தவருமற் புரிவதும், தாகம் உண்டாகி ஓடி வரும் பக்குவிகளுக்கு அருளுபதேசம் செய்வதுமே அவர் கள் கொண்டிருந்த கொள்கைகள். சமய விளக்கம் - சமய ஞான உபதேசம் - அவர்கள் மூச்சாக இருந்தது. உபதேச பரம்பரையாக இருந்துவந்தது இம்மரபு.

## 2 ஆவது குருமகாசந்நிதானம் :

ஸ்ரீ ஆனந்தபரவச தேசிகர் : அதிதீவிர பக்குவத்தால் உலகியலை மறந்து தம் ஆசாரியரது அருள்நிலையத்தைத் தரிசித்த வண்ணமே ஞானபுரீசர் ஆலயத்திற்கு மேற்றிசை யில் அமர்ந்து சமாதி கூடினார்கள்.

## 3 ஆவது குருமகாசந்நிதானம் :

ஏனைய மாணாக்கர், குருபரம்பரை தொடராது போவதை எண்ணிவருந்தி, முதற்குருமூர்த்திகள் சீவசமாதி கூடியிருக்கும் திருமுன்பில் சென்று விண்ணப்பிக்க, குரு மூர்த்திகள் மீண்டும் சமாதியினின்றும் எழுந்தருளிவந்து,

ஸ்ரீ சச்சிதானந்த தேசிகருக்கு உபதேசம் செய்தருளி, அவர் கட்கு நிட்டைநிலை கூடாமைகண்டு,

தானந்த மாதிநடு வில்லா தோங்கும்
சச்சிதா னந்தமயந் தானே யாய
ஆனந்த பரவசனைக் கண்டுங் கண்டும்
அந்தந்தோ பர்கதியை யறிந்தீ ரில்லை
மானந்தான் வடிவாகி நிற்ற லாலோ
மலமாயை கன்மமிவை மடியா தாலோ
ஞானந்தா னுமதுளத்தி லுதியா தாலோ
நாமறியோம் உமதுமயல் நவிற்று வீரே.

என்னும் திருப்பாட்டினை அருளிச்செய்தபொழுது அந்நிலை அவர்கட்குக் கைவந்தது. அதன்பின் அவர்களைப் பீடத்தில் இருக்கச்செய்து, முன்போலவே சமாதி நிலையில் அமர்ந்தருளிப் பின்னர் அருளாட்சிக்குவரும் மகாசந்நிதானங்கட்கும் தமது அருள் விளக்கத்தை அவ்வப்பொழுது செய்து வருகின்றார்கள்.

## 4 ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீ சச்சிதானந்த தேசிகருக்குப்பின் நான்காவது குருமகா சந்நிதானமாக எழுந்தருளியவர்கள் ஸ்ரீ மாசிலாமணி தேசிகர். இவர்களே ஸ்ரீ வைகுண்டத்தில் பிறந்து, ஐந்து வயது வரை ஊமையாயிருந்து முருகனருளால் ஊமை நீங்கப் பெற்று, அப்பொழுதே கந்தர் கலிவெண்பாவும் பின்பு மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழும் பாடியருளிய ஸ்ரீ குமரகுருபர சுவாமிகளை ஆட்கொண்டு, ஞானோபதேசம்செய்து காசியில் தங்கிச் சைவ சமயத்தைப் பரப்பிவருமாறு பணித்தருளினார்கள். அவ்வருளாணையின் வண்ணம் ஸ்ரீ குமரகுருபரர் நிறுவிய குமாரசுவாமி மடம் காசியில் இன்றும் சிறப்புடன் விளங்குதல் யாவரும் அறிந்தது.

5 ஆவது குருமகாசந்நிதானம் :

ஸ்ரீ ஞானசம்பந்த தேசிகர் : இவர்கள் காலத்தில் இவர்களது அருளாட்சியில் ஈடுபாடுகொண்ட மாவை குமாரசுவாமி முதலியார் என்பவர் சிவசைலம் முதலிய இடங்களில் 96 மடங்கள் கட்டி ஆதீனத்திற்கு அளித்தார்.

6 ஆவது குருமகாசந்நிதானம் :

ஸ்ரீ திருஞானசம்பந்த தேசிகர் : இவர்கள் அடியார் கூட்டத்துடன் செய்த தென்னாட்டு யாத்திரையில் வேள்வி மலை முருகனை வணங்கியபொழுது வள்ளியம்மை புலனாகாமையால், ' இங்கு வள்ளித் தாய் இல்லையோ ' என்று கேட்டபொழுது அவ்வம்மை, ' இதோ இருக்கின்றேன் ' என்று திருமேனியை வளைத்துக் காட்சி வழங்கினாள்.

இவர்கள் திருநெல்வேலிச் சிந்துபூந்துறை மடத்தில் எழுந்தருளியிருந்தபொழுது, அங்குள்ள அறச்சாலை மடத்தின் அதிபராயும், சிதம்பரம் குகைமடத்து ஞானப்பிரகாசரிடம் உபதேசம் பெற்று ஆன்மானந்த வாதியாயும் இருந்து, ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருளிய முத்தி நிச்சய நூலுக்கு மறுப்பும் எழுதிய புலவர் ஒருவர் எவ்வகையிலும் மன அமைதி பெறாமல் இக்குருமூர்த்திகளை வந்து வணங்க அவருக்கு இவர்கள் ஞானோபதேசம் செய்து ' தமிழாகரர் ' என்னும் தீட்சா நாமமும் தந்து ஆட்கொண்டருளினார்கள்.

7 ஆவது குருமகாசந்நிதானம் :

ஸ்ரீ திருவம்பல தேசிகர் : இவர்கள் காலத்தில் தஞ்சையை ஆண்ட சரபோஜி மன்னன் சிலரது படிற்றுரையால் தருமையில் உள்ள ஸ்ரீ ஞானபுரீசுவரர் கோயிலைச் ' ரூத்திர சமாதி ' என்று இகழ்ந்து அதனை இடிக்கும்படி ஆணை

தந்து ஆட்களையனுப்ப இவர்கள் "ஈசன் பலகீனன் என்றக்கால்" "தேசஞ் சிவாலயங்கள்" என்ற சிவபோக்சார் வெண்பாக்களை ஓதி அமைதியுற்றிருக்க, ஆலயத்தில் இடித்த இடந்தோறும் இரத்தம்பெருகி, ஆட்களும் மூர்ச்சை யாயினர். ஆணைபிறப்பித்த மன்னன் கண்ணொளியிழந் தான். இவற்றால் அவன் தன் தவற்றை உணர்ந்து, இவர் களிடம் வந்து வணங்கி மன்னிப்பு வேண்டிக் கண்ணொளி பெற்று, ஞானபுரீசரது அர்த்தயாம பூசைக்கு நிலங்களை நிவந்தமாக அளித்து மீண்டான்.

## 8 ஆவது குருமகாசந்நிதானம் :

ஸ்ரீ அழகிய திருச்சிற்றம்பல தேசிகர் : இவர் தமது பரிகல சேடத்தால் மலடியான ஒருத்தியை மகப்பேறு பெறச் செய் தருளினார்கள். இவர்கள் காலத்தில் அடியார் திருக்கூட்டத் துள் ஒருவராகிய ஸ்ரீ அழகிய திருச்சிற்றம்பல தேசிகர் என்பவர் சொர்க்கபுரம் ஆதீனத்தை நிறுவிச் சமய பரிபாலனம் செய்தார்.

## 9 ஆவது குருமகாசந்நிதானம் :

ஸ்ரீ திருநாவுக்கரசு தேசிகர் : இவர்கள் திருமுன் 'திரு மாலே பரம்பொருள்' என்று வாதிட்ட திருமால் சமயி ஒருவன் ஊமையாகி, இவர்கள் அருள்நோக்கால் ஊமை நீங்கப்பெற்றுத் திருத்தம் உற்றான்.

## 10 ஆவது குருமகாசந்நிதானம் :

ஸ்ரீ சிவஞான தேசிகர் : இவர்கள் இளமையிலேயே துறவுபூண்டு காசியில் தங்கி வடமொழி தென்மொழிகளில் வல்லவரானார்கள். இவர்களால் நிகழ்ந்த அருள் அற்புதச் செயல்கள் பல. பின்னரும் காசியாத்திரை செய்து அங்குப்

பலநாள் எழுந்தருளியிருந்து அரிய அருட்பாக்கள் பல அருளிச்செய்து மீண்டருளினார்கள். மற்றும் இவர்கள் அருளிய அருட்பாக்கள் பல. இவர்கள்பால் அருளுபதேசம் பெற்றுச் சிறப்புற்றோர் பலர்.

## 11 ஆவது குருமகாசந்நிதானம் :

ஸ்ரீ சச்சிதானந்த தேசிகர் : இவர்களிடம் அரசன் மாறுவேடம் பூண்டு வந்து சோறு இரந்து பெற்று, இவர்களது கருணைப்பெருக்கை அறிந்தான். இவர்கள் வஞ்சகர் சிலர் ஊட்டிய நஞ்சினையும் உண்டு நலத்துடன் இருந்து, அவர்களைத் திருத்தியருளினார்கள்.

## 12 ஆவது குருமகாசந்நிதானம் ;

ஸ்ரீ முத்துக்குமார தேசிகர் : இவர்கள் திருநெல்வேலியில் இருந்த மேடைதளவாய் முதலியார் முதலிய அன்பர் பலரது வேண்டுகோளை ஏற்றுத் திருநெல்வேலிக்கு எழுந்தருளும் பொழுது வழியில் காளையார்கோயிலில் தங்கினார்கள். அவ்வமையம் அங்கு வாழ்ந்திருந்த 'அருணகிரி முதலியார்' என்பவர், தம் மனைவியார் சிவகாமியம்மையாருடன் வந்து குருமூர்த்திகளது திருவடிகளில் வீழ்ந்து பணிந்து, நெடுங்காலமாகத் தமக்கு மகப்பேறின்மையை விண்ணப்பித்துப் பரிகலசேடம் அளித்தருளும்படி வேண்டினர். அப்பொழுது மாலைக்காலமாக இருந்தபடியால் குருமூர்த்திகள் மடைப்பள்ளியிற் சிதறிக்கிடந்த அன்னத்தைப் பொறுக்கிவரச்செய்து, அதனையே அருட்பிரசாதமாக அளித்தருளினார்கள். அதனை ஏற்று உண்ட சிவகாமியம்மையார் பின்னர் ஆண்மகவைப் பெற, பெற்றோர் இருவரும் பெருமகிழ்வுற்றுக் குருவருளை வியந்து துதித்தனர்.

## 13. ஆவது குருமகாசந்நிதானம் :

**ஸ்ரீ ஞானசம்பந்த தேசிகர் :** இவர்கள் காசிக் கங்கை நீரைத் தங்கள் ஆன்மார்த்த மூர்த்தியின் திருமுன்பிற்கு வருவித்து அதில் தமக்கு முற்பட்ட மகாசந்நிதானங்களை யும் நினைந்து நினைந்து மூழ்கியவர்கள். இப்பெருஞ்செய லுக்குப் பெரிதும் முன்னின்று உதவியவர்கள் ஆதீனத் திருக்கூட்டத்து அடியவருள் ஒருவராகிய விருத்தாசலத் தம்பிரான் சுவாமிகள்.

மகாசந்நிதானம் அவர்கள் தம் ஆன்மார்த்த மூர்த்தி யுடன் காசி யாத்திரை சென்று திரும்புவதில் உள்ள இடர்ப் பாடுகளைத் திருவுளத்தடைத்து; 'தமது ஆதீனத் திருக் கூட்டத்தவரில் கங்கையைத் தருமைக்குக் கொண்டுவரும் ஆற்றல் படைத்தவர் ஒருவரும் இல்லையோ' என்று கேட்ட பொழுது, விருத்தாசலத் தம்பிரான் சுவாமிகளே 'திரு வருளையும், குருவருளையும் துணைக்கொண்டு அடியேன் இப் பணியை நிறைவேற்றுகின்றேன்' என்று கூறி உத்தரவு பெற்றுத் திருவாங்கூர் மன்னனது ஆட்சிக்குட்பட்ட பத்ம நாப புரத்துக்குச் சென்றார்கள். சென்றவர்கள் அங்குள்ள சிவாலயத்தில் திருமுன்பு நின்று தமக்கு இயல்பாக உள்ள சாரங்கி வாத்திய வன்மையால் அதன் வழியே தேவாரம் முதலிய அருட்பாடல்களை இனிமையாகப்பாடிப் பரவசப்பட் டிருக்கும்பொழுது அவர் தோளில் அம்பிகை நின்று நடனம் புரிவதை அங்கு வந்த மன்னன் கண்டு வியந்து பணிந்து சுவாமிகளைத் தன் அரண்மனைக்கு எழுந்தருள்வித்து வழி பாடுகள் பல இயற்றி, 'அடியேனால் ஆகத்தக்க பணி ஏதே னும் உண்டோ?' என்று கேட்க, சுவாமிகள் கங்கை நீர் தருமைக்கு வரவேண்டிய நிலைமையைத் தெரிவித்தார்கள். உடனே அரசன் யானைகள் பலவற்றையும், ஒட்டகங்கள் பலவற்றையும் விடுத்து அளவற்ற பாத்திரங்களால் கங்கை

நீரைக் கொணர்விக்க, தருமை ஆதீனத்தின் பூசை முற்றத்தில் அந்நீர் ஏராளமாக நிரப்பப்பெற்றது. அதில் முன் சொன்னவாறு குருமூர்த்திகள் மூழ்கி மகிழ்ந்தார்கள்.

## 14 ஆவது குருமகாசந்நிதானம் :

ஸ்ரீ கந்தப்ப தேசிகர் : இவர்கள் ஆட்சிக் காலத்தில் இவர்கள் தென்னாட்டு யாத்திரையை மேற்கொண்டுசென்று திருநெல்வேலியில் எழுந்தருளியிருந்தபொழுது மழையில்லாமையால் நாடு பஞ்சத்திற்குள்ளாகியிருந்தது. ஆயினும் வெள்ளையர் அரசாங்கம் குடிகளை நிலவரி தருமாறு வற்புறுத்திவந்தது. வரி செலுத்தமாட்டாத குடிமக்கள் வெள்ளைத் துரையிடம் சென்று மழை இல்லாமையைச் சொல்லி முறையிட்டனர் துரையவர்கள், ‘ உங்கள் பாதிரியாரிடம் ( குருமூர்த்திகளிடம் ) நீங்கள் சென்று தெரிவித்து வேண்டிக்கொண்டால் மழை பெய்வித்துவிடுவாரே ’ என்று ஏளனமாகக் கூறினர். மழையில்லாத வருத்தத்தோடு வெள்ளைத் துரையின் இகழுரையால் வருத்தம் மிக, மக்கள் யாவரும் குருமூர்த்திகளிடம் சென்று நிகழ்ந்தவற்றை எடுத்துக்கூறி விண்ணப்பித்தனர். குருமூர்த்திகள் புன்முறுவல் பூத்து, சொக்கநாதப்பெருமான் பூசனைக்குப் பின்னர்ச் சிறிதுநேரம் சமாதியில் ஆழ்ந்திருந்து பின்னர் இப்பாடலை அருளிச்செய்தார்கள்.

சைவ சமயஞ் சமயமெனில், அச்சமயத்
தெய்வம் பிறைசூடுந் தெய்வமெனில், — ஐவரைவென்று
ஆனந்த வெள்ளத் தழுந்துவதே முத்தியெனில்.
வானங்காள் பெய்க மழை.

இப்பாடலை அருளிச்செய்தவுடன் மேகங்கள் திரண்டு மழை பொழியப் பஞ்சம் தீர்ந்தது. வெள்ளைத்துரை வெட்க முற்றுக் குருமூர்த்திகளிடம் வந்து, நூறு வராகன் பொன்

காணிக்கையாக வைத்து வணங்கிப் பிழைபொறுக்க வேண்டினர். குருமூர்த்திகளும் கடைக்கண் நோக்கம் பாலித்தருளினர்கள்.

## 15 ஆவது குருமகாசந்நிதானம் :

ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் : இவர்கள் 13 ஆவது குருமகாசந்நிதானத்தின் ஆட்சிக் காலத்தில் கங்கை நீரைத் தருமைக்குக் கொணர்ந்த அருட்பணியில் ஈடுபட்ட விருத்தாசலத் தம்பிரான் சுவாமிகளேயாவர். இவர்களது இசை வன்மை 13 ஆவது மகாசந்நிதானத்தின் குறிப்பிலேயே கூறப்பட்டது. இவர்கள் காலத்திலும் மழையின்றி நாடு பஞ்சத்தால் வருந்தியபொழுது இவர்கள் தமது சாரங்கி வாத்திய இசையில் திருவையாற்றுப்பெருமான் திருமுன்பில் மேகராகக் குறிஞ்சிப் பண்ணில் அமைந்த ஞானசம்பந்தரது தேவாரத் திருப்பதிகங்களைப்பாடி வணங்கப் பெருமழை பெய்து பஞ்சம் நீங்கியது. மற்றொரு சமயத்திலும் தாது வருஷப் பஞ்சத்திலும் இவர்கள் எங்கும் வருண ஜெபம் முதலியன நடக்கச்செய்தமையால், மழை வளம் சுரந்து மக்கள் நலம் உற்றனர். இவர்கள் தம்பிரான் சுவாமிகளாய் இருந்தபொழுது ஏற்பட்ட திருவாங்கூர் மன்னனது தொடர்பு, இவர்கள் மகாசந்நிதானமாக அருளாட்சி ஏற்ற பின் வளர்ந்து பெருகிற்று.

அதற்குச் சிறந்த காரணராய் இருந்தவர் சுசீந்திரம் கட்டளை விசாரணையில் இருந்த 'இலக்கண சுவாமிகள்' என்னும் முத்துக்குமாரத் தம்பிரான் சுவாமிகளாவர். இவர்களிடம் அம் மன்னன் பல இலக்கண இலக்கிய புராண சாத்திர நூல்களைக் கேட்டு அகம் மிக மகிழ்ந்தான்.

## 16 ஆவது குருமகாசந்நிதானம் :

ஸ்ரீ சச்சிதானந்த தேசிகர் : இவர்கள் காலத்தில் மாயூரம் துலாக்கட்டத்தில் இருந்த சாஸ்திரியார் ஒருவர் பிரம்ம சூத்திரத்தை வைத்து விஷ்ணு பரத்துவம் சாதிக்க விரும்பினார். அவரது விருப்பப்படியே இக் குருமூர்த்திகளே நடுவு நிலைமையில் வீற்றிருக்க, ஆதீனத்து அடியவருட் சிறந்த 'ஆறுமுகத் தம்பிரான்' என்பவருடன் சமயவாதம் தொடங்கி நடைபெற்றது. தம்பிரான் சுவாமிகள் பல பிரபல பிரமாணங்களால் சிவபரத்துவமே வேத முடிபாதலை விளக்கிக் காட்ட, சாஸ்திரியாரும் உடன்பட்டுத் தம்பிரான் சுவாமிகளது திருவடிகளில் பணிய முயன்றார். சுவாமிகள், 'இங்கு வணக்கமெல்லாம் குருமூர்த்திகட்கே' என்று கூறச் சாஸ்திரியார் மகாசந்நிதானத்தின் திருவடிகளில் வணங்கிச் சிவ தீட்சை அளித்தருள வேண்டினார். குருமூர்த்திகள் திருவுளம் இசையச் சாஸ்திரியார் தம் மனைவியாரோடும் வந்து சிவதீட்சை பெற்று மகாசைவராகி 'வெள்ளப்பள்ளம்' என்னும் கிராமத்தைக் குரு காணிக்கையாக ஏற்பித்தார். இவர்கள் காலத்தில் திரிசிரபுரம் மகாவித்துவான், மீனாட்சி சுந்தரம்பிள்ளையவர்கள் ஆதீனத் தொடர்புபெற்றிருந்தார்கள்.

## 17 ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீ மாணிக்கவாசக தேசிகர் : இவர்கள் அருளாட்சிக் காலத்தில் ஆதீன அடியவர் பலர் புலமை பெற்றுத்திகழ்ந்து ஆங்காங்குச் சென்று சைவ சமயத்தையும், தமிழ்மொழியையும் பரப்பி வந்தனர். 'பரமசிவத் தம்பிரான்' என்பவர் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையிடம் பாடம் கேட்டுத் தாமும் 'மகாவித்துவான்' என்னும் சிறப்புப்பெயர் பெற்றுப் பல நூல்களை இயற்றினார். அவற்றுள் 'சிவானுபவ சாரம்' என்னும் நூலை மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களே பாராட்டியுள்ளார். இந்நூல் அச்சாகி

யுள்ளது. 'ஆறுமுகத் தம்பிரான்' என்பவர், பன்மொழிப் புலவராய்ப் பலருக்கு வித்தியா குருவாய் விளங்கினர். இவர் தம் மாணாக்கர் ஆண்டுதோறும் இவருக்குக் காணிக்கை செலுத்திவந்தனர். 'பழமலைத் தம்பிரான்' என்பவர், மைசூர் மன்னன் அழைப்பிற்கு இரங்கி அங்குச் சென்று சாத்திர விரிவுரைகள் நிகழ்த்தி, மன்னரால் பல சிறப்புக் களைப் பெற்றார். மாவட்ட நடுவர் மாயூரம் வேதநாயகம் பிள்ளையவர்கள் இப் பதினேழாவது மகாசந்நிதானத்தின் அருளாட்சிக் காலத்தில் இருந்தவரே.

## 18 ஆவது குருமகாசந்நிதானம் :

ஸ்ரீ சிவஞான தேசிகர் : இவர்கள் காலத்தில் ஆதீனத் திலும், ஆதீனக் கோயில்களிலும் புதிய முறையில் பல திருப் பணிகள் செய்யப்பெற்றன. மொகஞ்சொதாரோ, ஹரப்பா முதலிய மறைந்த நகரங்கள் கண்டுபிடிக்கப்பட்டுப் பல வரலாற்று உண்மைகள் வெளியானது இவர்கள் காலத்தி லேயாகும்.

## 19 ஆவது குருமகாசந்நிதானம் ;

ஸ்ரீ மாணிக்கவாசக தேசிகர் : இவர்கள் காலத்தில் இந்திய மக்கள் வெள்ளையரோடு சுதந்திரப் போராட்டத்தில் ஈடு பட்டிருந்தனர். அவ்வமயம் ஆதீனத்து அடியவர்களையும் ஆதீனக் கோயில்களையும் தக்க முறையில் பரிபாலித்துவந்த சிறப்பு இவர்களுக்கு உரியது. கடன் தொல்லைகளிலிருந்து மடத்தைமீட்டு இன்றைய வளர்ச்சிக்கு அடித்தளமிட்டவர் கள் இவர்கள்

## 20 ஆவது குருமகாசந்நிதானம் :

ஸ்ரீ சிவஞான தேசிகர் : இவர்கள் ஆட்சிக்கு வந்தகாலம் முதல் உலகமகாயுத்தம் நடைபெற்றிருந்தகாலம்,அவ்வமயம்

தமது அருளாட்சிக்குள் யாதோர் இன்னலும் நிகழாத வாறு சொக்கநாதர் வழிபாட்டினாலும், ஆலயச் சிறப்பு வழிபாடுகளாலும் இவர்கள் சமய பரிபாலனம் செய்து வந்தார்கள். இங்கிலாந்து மன்னர் ஐந்தாம் ஜார்ஜ் தில்லியில் வந்து தர்பார் நடத்தியது இவர்கள் காலத்திலே யாகும். மதப்பற்று உடையவர்களும் அரசியலில் தீவிர பங்குகொண்டிருந்த அக்காலத்தில் இவர்களது அருளாட்சி செவ்வனே நடைபெற்றது.

## 21 ஆவது குருமகாசந்நிதானம் :

ஸ்ரீ சச்சிதானந்த தேசிகர் : இவர்களது அருளாட்சி மிகக் குறைந்தகாலமே - ஓராண்டுக்குள்ளேயே நடைபெற்றது. அதற்குள் ஆதீன நிதிநிலை திருந்தி நின்றது.

## 22 ஆவது குருமகாசந்நிதானம் :

ஸ்ரீ மாணிக்கவாசக தேசிகர் : இவர்கள்காலத்தில் சென்னை அரசில் இந்து சமய அறநிலைய மன்றம் தோன்றியது. இவர் களது நான்கு ஆண்டு அருளாட்சிக் காலத்தில் சமயப் பணிகளுக்குப் பொருளுதவிகள் செய்யப்பெற்றன. திருப் பாதிரிப்புலியூர் ஸ்ரீ ஞானியார் சுவாமிகள் மடத்தில் நடை பெற்ற சைவசித்தாந்த மாநாட்டிற்கு ஓராயிர ரூபாய் உதவித்தொகையாக அளிக்கப்பட்டது. நாத்திகம் சிறிது தலைதூக்கிய அக்காலத்தில், இத்தகைய துணைச்செயல்கள் இன்றியமையாதனவாய் இருந்தன.

## 23 ஆவது குருமகாசந்நிதானம் :

ஸ்ரீசுப்பிரமணிய தேசிகர் : இவர்கள் தமிழ்நாட்டில்உள்ள பல தலங்களுக்கும் யாத்திரை செய்தார்கள். அவ்வமயம் ஆங்காங்குள்ள பெருமக்கள் பலரும் மகாசந்நிதானத்

அவர்களது அருள்பெற மிகச் சிறப்பாக வரவேற்றுப் பட்டணப் பிரவேசங்கள் செய்வித்து, வழிபாடுகள் செய்து மகிழ்ந்தார்கள். திருச்சிராப்பள்ளித் திரு. எல். எம். பரமசிவம்பிள்ளையவர்கள், திரு. டி. எம். நாராயணசாமிப்பிள்ளையவர்கள், மதுரை திரு. பி. டி. இராஜன் அவர்கள், திருநெல்வேலி மேடை தளவாய் முதலியார், கோட்டைப் பிள்ளைமார்கள் முதலியோர் குருமூர்த்திகளை வரவேற்றுச் சிறப்புற்றபெருமக்களில் குறிப்பிடத்தக்க சிலராவர். தளவாய் முதலியார் சொக்கநாதருக்குக் கனகாபிஷேகம் செய்வித்து மகிழ்ந்தமை இங்குக் குறிப்பிடத்தக்கதொன்று.

இவர்கள் ஆட்சிக் காலத்தில் யாழ்ப்பாணம் சுவாமிநாத பண்டிதர் ஆதீன வித்வத் சிகாமணியாய் விளங்கிப் பல அரும் பணிகள் செய்தார்கள். சீகாழி ப. அ. முத்துத் தாண்டவராயப்பிள்ளை, அவர் குமாரர் சோமசுந்தரம் பிள்ளை எம். ஏ., எல். டி., காழி, சிவ. கண்ணுசாமிப்பிள்ளை முதலாக மற்றும் பல புலவர்கள் ஆதீனத்தின் சார்பில் அறிவுப்பணி செய்தார்கள். சமய நூல்கள் பல அச்சேற்றி அன்பர்கட்கு இலவசமாக வழங்கப்பெற்றன.

## 24 ஆவது குருமகாசந்நிதானம்:

ஸ்ரீ சண்முக தேசிகர்: இவர்கள்காலத்தில் ஆதீனத்தின் ஆலயப் பணிகளும், சமயப்பணி தமிழ்ப்பணிகளும், சமூகப் பணிகளும் சிறப்புற்றுத் தழைத்தன. ஆதீனத்தின் நூலகம் பலவகை நூல்களால் விரிவுகண்டது. சமயப்பேரறிஞர்கள் பலரும் பங்கு பற்றிப் பணியாற்றும் வகையில்சைவசித்தாந்த மாநாடு ஆதீனத்தில் நடைபெற்றது. ஞானசம்பந்தம் என்னும் சமய இலக்கியத் திங்கள் இதழ் தொடங்கி வெளிவரலாயிற்று. ஸ்ரீ குருஞானசம்பந்தர் துவக்கப் பள்ளி, ஆகம பாடசாலை, தேவார பாடசாலை ஆகிய கல்வி நிலையங்கள் தோன்றின. ஞானசம்பந்தம் அச்சகவாயிலாகப் பல

சிறிய, பெரிய வெளியீடுகள் வெளிவந்தன. ஆதீனக் கோயில்களிலும், ஆதீனத் திருமடத்திலும் சிறப்புக்காலங் களில் சமயச் சொற்பொழிவுகள் பல நிகழ்ந்தன. மற்றும் இன்னோரன்ன அரும்பெரும் பணிகள் பல இவர்கள் காலத் தில் தோன்றி வளர்ந்தன.

## 25 ஆவது குருமகாசந்நிதானம் :

ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் : இவர்கள் திருவுளப் பாங்கின் வண்ணம் நிகழ்ந்த அரும்பெருஞ் செயல்கள் அளவற்றன வாகும். தருமையாதீனம் 'திருக்கயிலாய பரம்பரை' என் பதை மெய்ப்பிக்கும் வகையில் இவர்கள் கடுமையான கயிலாய யாத்திரையை மேற்கொண்டு கயிலாயதரிசனம் செய்து மீண்டருளிக் கயிலைக் குருமணியாய் விளங்கினர்கள். இமயப்பெருந்தலங்களாகிய கேதாரம், அமரநாதம், பசுபதி நாதம் என்பவற்றையும், ஜோதிர்லிங்கத் தலங்களையும் இவர்கள் தரிசித்து மகிழ்ந்தார்கள். காசித் தலத்திற்கு ஒன்பது முறை யாத்திரை செய்து அங்குப் பலநாள் தங்கிக் கங்காஸ்நானம். திருக்கோயில் வழிபாடு, அடியவர் வழிபாடு முதலியன நிகழ்வித்தார்கள். ஆதீனத்தின் சார்பில் ஆலயப் பணிகள், அறப்பணிகள், கல்விப்பணிகள் முதலிய அள வற்ற பணிகளும் சிறப்புற நிகழத் திருவுளம் பாலித்தார்கள்.

திருமுறைகளுள் ஒவ்வொன்றும் தனித்தனி நூலாக அரிய குறிப்புரை ஆராய்ச்சிகளுடன் வெளிவந்தமை இங்குச் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. இவர்களது அருட்டிருவுளப் பாங்கின் அருமையினை உணர்ந்த அன்பர்கள் இவர்களுக் குக் கனகாபிஷேகம்செய்வித்து மகிழ்ந்தார்கள். இறுதியிலும் இவர்கள் காசியாத்திரையை மேற்கொண்டு சென்று அங்குப் பரிபூரணமானமை அனைவரும் வியந்து போற்றும் திருவருட் செயலாக உள்ளது. வழிபாடு, ஜெபம், தியானம்

திருமுறைப் பாராயணம் முதலியவற்றில் இடையறாத ஈடுபாடுகொண்ட இவர்கட்கு இறைவன் காசியில் பரிபூரணமாகும் நிலையை அருள்செய்தது இயல்பேயாகும்.

## 26 ஆவது குருமகாசந்நிதானம் :

இதுபொழுது 26ஆவதுமகாசந்நிதானமாக அருளாட்சி ஏற்று இருப்பவர்கள் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள். இவர்கள் கல்வி கேள்விகளில்சிறந்து வித்துவான் பட்டம் பெற்றவர்கள். பேச்சாற்றல் மிக்கவர்கள். ஒடுக்கத்தில் இருந்தபொழுது திருச்சிராப்பள்ளியில் உள்ள ஸ்ரீ மௌனமடம் கட்டளைவிசாரணையில் இருந்ததுடன் சென்னையில் உள்ள ஆதீன சமயப் பிரசார நிலையத்தின் பொறுப்பினை ஏற்றுச் சிறப்பு நாட்களில் அங்குச் சமய மாநாடுகள் சமயச் சொற்பொழிவுகள் முதலியவற்றை நிகழ்த்துவித்தும், வாரவழிபாடு, தலயாத்திரை முதலியவைகளைத் திருக்கூட்டத்தவருடன் செய்தும், சமய வளர்ச்சிக்கு ஆவன பல செய்தவர்கள். அப்பர் அவதாரத் தலமாகிய திருவாமூரில் நூதனமாக எடுக்கப்பெற்ற அப்பர் ஆலயத் திருப்பணியை அன்பர் பலரைக் கொண்டு முற்றுவித்து, நித்திய பூசை, மாதச் சதயம், ஆண்டுக் குருபூஜை முதலியன நிகழ்தற்கு ஆவனவற்றை இவர்கள் செய்தருளினமை குறிப்பிடத்தக்க ஒன்று. அண்மையில் திருவையாற்றுக் கட்டளை விசாரணையில் அமர்ந்து அத் திருக்கோயில் திருப்பணியை முற்றுவித்து மகாகும்பபிடேக விழா மிகச் சிறப்புற நிகழ இவர்கள் முன்னின்றமையாவரும் அறிந்தது. இவர்கள் அருளாட்சி ஏற்றமை அனைவருக்கும் மகிழ்ச்சியைத் தருவது.

வாழ்க குருமரபு.

உ

குருபாதம்

# சொக்கநாத வெண்பா

ஆரிடத்தில் வந்தும் அடியேன் உளத்திருந்தும்
ஓரிடத்தில் உற்பவித்தும் உள்ளபடி—பாரிடத்தில்
நாயேன் உளமகிழ நன்று உணர்த்திடுவாய்
தாயேநீ சொக்கநா தா.

நித்தம் எழுந்தருளி நின்மலனே என்றனக்குப்
புத்தி மிகமிகவும் போதித்துச்—சித்தமயல்
போக்குவாய் இன்பசுக பூரணத்தி ரண்டறவே
ஆக்குவாய் சொக்கநா தா.

நலம்விளைக்கும் உன்பதத்தில் நாடவைப்ப தல்லால்
மலம்விளைக்குஞ் சோறருந்த வைத்தாய்—சலம்விளைக்குஞ்
சென்னியா மாமதுரைச் செல்வாஎல் லாம்வல்ல
தன்னியா சொக்கநா தா.

தவமோ சிறிதறியேன் தாரணிமேற் செய்யும்
அவமோ அளவில்லை யானல்—சிவமோ
பெறுமாறென் கூடற் பிரானேமுப் பாசம்
அறுமாறென் சொக்கநா தா.

ஆறாறு தத்துவத்தும் ஆணவத்தும் கன்மத்தும்
மாறுதெந் நாளும் மயங்காமல்—பேறாக
நித்தனே நின்மலனே நின்பதத்தில் ஆள்மதுரை
அத்தனே சொக்கநா தா.

ஆசான் உளத்திருந்தும் ஆன்மா உளத்திருந்தும்
மாசார் மலத்தை அறுத்தருளி—நேசா
ஒளித்திருந்த இன்பவெள்ளம் ஒன்றஉயிர்க்(கு) என்றும்
அளிப்பவன்நீ சொக்கநா தா,

எக்காலம் இக்காயம் இற்றிடுமோ என்வினைகள்
எக்காலம் மும்மலங்கள் இற்றிடுமோ—எக்காலம்
ஆநந்த சாகரத்தில் ஆடிடுமோ என்னுளந்தான்
ஆநந்தா சொக்கநா தா.

எக்காலம் மெய்க்கே இரையிடுதல் இற்றிடுமோ
எக்காலம் இக்கரணம் இற்றிடுமோ—எக்காலம்
பேசாநு பூதி பிறந்திடுமோ என்னுளத்தில்
ஆசானே சொக்கநா தா.

சேகரத்தி னுச்சியின்மேல் செந்தேனுக் கிச்சித்தே
போகவசம் ஆகுமோ போகாதார்—தாகம்
மிகஅறவே யுள்ளத்தில் வேண்டிலுன்தாட் செந்தேன்
அகமுறுமோ சொக்கநா தா.

எவ்விதையை மாக்கள்பயிர் இட்டார் இட்டவரே
அவ்விதையின் போகம் அருந்துதல்போல்—செவ்விதாய்த்
துன்மார்க்கம் செய்வார்க்குத் தோன்றும் பிறப்புமுத்தி
சன்மார்க்கஞ் சொக்கநா தா.

ஆலந் தரித்தலிங்கம் ஆலவாய்ச் சொக்கலிங்கம்
மூலமாய் எங்கும் முளைத்தலிங்கம்—பாலொளியாம்
மத்தனே கூடல் மதுரா புரிஉமையாள்
அத்தனே ஆலவா யா.

எல்லாம் உனதுபதம் எல்லாம் உனதுசெயல்
எல்லாம் உனதருளே என்றிருந்தால் — பொல்லாத
மாதுயரம் நீங்கும் மருவும் உனதடிக்கே
ஆதரவாய்ச் சொக்கநா தா.

பேரன்பன் அல்லன் பிழைசெய்யான் தானல்லன்
ஓரன்பும் இல்லா உலுத்தனேன் — பேரன்பு
காட்டிஎனைக் காட்டியுனைக் காட்டியின்பத் தொட்டிலிலே
ஆட்டிவளர் சொக்கநா தா.

கருணை நிதியே கடவுளே அன்பர்
பொருளான பேரின்பப் பொற்பே — ஒருநாளும்
நீங்கா தெனதறிவில் நின்றசுகா னந்தமே
ஆங்காண் நீ சொக்கநா தா.

நானே தனுகரணம் நானே மலமாயை
நானே இவைகள் நடத்துவது—நானேதான்
பூண்ட வினைஅறுப்போன் புண்ணியபா வம்புரிவோன்
ஆண்டவனே சொக்கநா தா.

தேகாதி எல்லாஞ் சடம்பிணம்பொய் என்றிருக்க
மோகாதி எல்லாம் முடிந்திருக்க—ஏகமாய்
எப்போதும் இன்பவெள்ளத் தேயிருக்க வாழ்வை என்னுள்
அப்போதே சொக்கநா தா.

உன்னைச்சிங் காரித் துனதழகு பாராமல்
என்னைச்சிங் காரித் திடர்ப்பட்டேன்—பொன்னை
அரிவையரை யேநினையும் அன்பிலேற் குன்தாள்
தருவையோ சொக்கநா தா.

ஆறுதலை இல்லை அடியேனுக் கன்பாகத்
தேறுதலை சொல்வார் சிலர்இல்லை — வேறெனக்குத்
திக்காரும் இல்லை சிவனே பழிக்கஞ்சி
சொக்கேநின் தாளே துணை.

உனக்குப் பணிசெய்ய உன்றனையெந் நாளும்
நினைக்க வரமெனக்கு நீதா — மனக்கவலை
நீக்குகின்ற தென்மதுரை நின்மலனே எவ்வுலகும்
ஆக்குகின்ற சொக்கநா தா.

— குருஞானசம்பந்தர்.

உ

குருபாதம்

# சிவபோக சாரம்

சித்தி தருநாதன் தென்கமலை வாழ்நாதன்
பத்தி தருநாதன் பரநாதன் — முத்திப்
பெருநாதன் ஞானப் பிரகாசன் உண்மை
தருநாதன் நம்குருநா தன்.

தேசு செறிகமலைச் செங்கமலப் பொற்பாதன்
பேசுதமிழ் ஞானப் பிரகாசன் — பாசவினை
வாட்டினன் மீட்டுநான் வாரா வகையருளைக்
காட்டினன் கூட்டினன் காண்.

அநாதிசுக ரூபி அரனடிக்கீழ் என்றும்
அநாதி சுகரூபி ஆன்மா — அநாதி
இருந்தமலம் போக்கி இறைஅருளி னாலே
இருந்தபடி யேகண் டிரு.

ஏதேது செய்தாலும் ஏதேது சொன்னாலும்
ஏதேது சிந்தித் திருந்தாலும் — மாதேவா
நின்செயலே என்று நினதருளா லேஉணரின்
என்செயலே காண்கிலே னே.

ஈசன் அடியில் இருக்கையிலே எங்கெங்கும்
ஈசனடி தேடி இளைத்தேனே — பேசரிய
பொற்பதத்தன் செங்கமலப் பொற்பாதன் தன்னுடைய
நற்பதத்தைக் காணுமுன் நான்.

அவரவருக் குள்ளபடி ஈசனரு ளாலே
அவரவரைக் கொண்டியற்று மாறல் — அவரவரை
நல்லார்பொல் லாரென்று நாடுவதென் ? நெஞ்சமே
எல்லாம் சிவன்செயலென் றெண்.

என்னிடத்தில் நின்செயலே இல்லையென்றால் யாதுறினும்
நின்னிடத்தில் யான்வேண்டல் நிச்சயமே — என்னிடத்தில்
இன்மை உயிர்க்குயிர்நீ யின்மை இருந்தியற்றின்
நன்மைதின்மைக் கேதுவோ நான்.

நாம்பெரியம் என்னுமதை நாடா தடக்குமவர்
தாம்பெரியர் என்றுமறை சாற்றியிடும் — நாம்பெரியர்
என்பார் சிறியர் இவரலா திவ்வுலகில்
துன்பார் சுமப்பார்கள் சொல்.

ஆறுறு தத்துவமும் ஆணவமும் நீங்கிஉயிர்
பேருக ஆனந்தம் பெற்றாலும் — வேருகப்
பார்த்திருப்ப தன்றியே பாழான கன்மத்தை
நீத்திருக்க லாமோ நிலத்து.

ஈசன் பலகீனன் என்றக்கால் ஆலயத்தில்
மோசம் வந்ததென்று மொழியலாம் — ஈசனே
ஆக்குவதும் ஆக்கி அழிப்பதுவும் தானுனல்
நோக்குவதென் ! யாம்பிறரை நொந்து.

தேசம் சிவாலயங்கள் சேர அலையொரு
மோசம்வந்த தையோ முதல்வனே — தேசத்து
மன்னைவெறுப் பேனே வருவினையை ஊட்டுவிக்கும்
உன்னைவெறுப் பேனே உரை.

அநித்தியத்தை நித்தியமென் றுதரிக்கும் பொல்லா
மனித்தருடன் கூடி மருவார் — தனித்திருந்து
மோனந்த மாஞ்சிவத்தில் மூழ்கி மலத்தைஅறுத்
தானந்த மாயழுந்து வார்.

தனையறியார் ஈசன் தனையறியார் பாச
வினையறியார் ஆனந்தம் மேவார் — தனையறியுஞ்
சிட்டர்தமக் கில்லாத தீங்குரைப்பர் பொல்லாத
துட்டர்தமக் குள்ள தொழில்.

பரபரக்க வேண்டா பலகாலுஞ் சொன்னேன்
வரவரக்கண் டாராய் மனமே — ஒருவருக்கும்
தீங்கு நினையாதே செய்ந்நன்றி குன்றாதே
ஏங்கி இளையா திரு. — குருஞானசம்பந்தர்.

## தனிப்பாடல்கள்

மிண்டுசெய்யு மும்மலமு மிக்கவினை நல்குரவும்
பண்டுபோ லென்னைவந்து பற்றுமல் — கொண்டுபோய்
நின்னருளிற் சேர்க்க நினைகண்டாய் தென்மதுரை
மன்னவனே சொக்கநா தா.

ஆய்வார் பதிபசு பாசத்தின் உண்மையை ஆய்ந்தறிந்து
காய்வார் பிரபஞ்ச வாழ்க்கையெல்லாங் கல்விகேள்வியல்லல்
ஓய்வார் சிவானந்த வாரியுள் ளேயொன் றிரண்டுமறத்
தோய்வார்கமலையுள்ஞானப்ரகாசன்மெய்த்தொண்டர்களே.

அவரவர் வினைவழி அவரவர் வந்தனர்
அவரவர் வினைவழி அவரவர் அனுபவம்
எவரெவர்க் குதவினர் எவரெவர்க் குதவிலர்
தவரவர் நினைவது தமைஉணர் வதுவே.

---

கதிவாழ்க வேதநல் ஆகமம் வாழ்கநற் கண்மணிஉன்
பதிவாழ்க சைவம் திருநீறும் கண்டியும் வாழ்கஅருட்
குருவாகும் நின்றன் திருக்கூட்டம் வாழ்கநற் கோநிரைகள்
தெருவாழ்க ... திருஞான சம்பந்த தேசிகனே.

## சமயகுரவர் துதி

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி.

## சமயகுரவர் குருபூசைத் திருநாட்கள்

சித்திரைச் சதயத்து அப்பர். சிறந்த வைகாசி மூலத்து,
அத்தரைப் பணி சம்பந்தர், ஆனிமா மகத்தில் அந்த
முத்தமிழ் வாத வூரர், முதியநல் ஆடி தன்னில்
சுத்தமாம் சுவாதி நாளில் சுந்தரர் கைலை சேர்ந்தார்.

## சந்தான குரவர் துதி

ஈராண்டிற் சிவஞானம் பெற்றுயர்ந்த
மெய்கண்டார் இணைத்தாள் போற்றி.
நாராண்ட பல்லடியார்க்கு அருள்புரிந்த
அருள்நந்தி நற்றாள் போற்றி.
நீராண்ட கடந்தை நகர்
மறைஞான சம்பந்தர் நிழற்றாள் போற்றி.
சீராண்ட தில்லைநகர் உமாபதியார்
செம்பதுமத் திருத்தாள் போற்றி.

## சந்தானகுரவர் திருநட்சத்திரங்கள்

சித்திரை அத்தம் உமாபதி ஆவணித் திங்கள்தனில்
உத்திரம் சீர்கொள் மறைஞான சம்பந்தர், ஓதுகன்னி
சுத்தமெய்ப் பூரம் அருணந்தி, ஐப்பசிச் சுவாதிதனில்
வித்தக மெய்கண்ட தேவர் சிவகதி மேவினரே.

உ

குருபாதம்

# " ஞானசம்பந்தம் "

அரிய கட்டுரைகளுடன் வெளிவரும் திங்கள் இதழ்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திலிருந்து வெளிவருவது. சமயப் பொருள் முதலியவை குறித்துத் தெளிவான கட்டுரைகள் அடங்கியது. சைவ சமயத்தின் உண்மைகளை உணர்வதற்குப் பெருந்துணையானது.

புதிய சந்தாதாரர்களாகச் சேர்பவர்கள் புதிய சந்தா என்பதோடு தங்கள் முகவரியையும் தெளிவாக மணியார்டர் கூப்பனில் எழுதுதல் வேண்டும். பழைய சந்தாதாரர்கள் புதிய ஆண்டுக்குப் பணம் அனுப்பும்போது பழைய சந்தா எண்ணைக் குறித்தல் வேண்டும். எவையேனும் விவரம் தெரிந்துகொள்ள விரும்புவோர் பதில் எழுதுவதற்குப் போதுமான தபால் தலைகள் அனுப்புதல் வேண்டும்,

" ஞானசம்பந்தம் " மாத இதழைப்பெற ஆயுள் சந்தாதாரர்களாகச் சேரவும், தவணைமுறையில் ஆயுள் சந்தாவைச் செலுத்தவும் அன்பர்களுக்கு வாய்ப்பு அளிக்கப்படுகிறது. சந்தாத் தொகையைக் கீழ்க்கண்ட முகவரிக்கே அனுப்பிவைக்கவும்.

| | | |
|---|---|---|
| ஆயுள் சந்தா | ... | ரூ. 100—00. |
| உள்நாடு | ... | ரூ. 4—00. |
| வெளிநாடு | ... | ரூ. 6—00. |

சந்தா அனுப்பவேண்டிய முகவரி :—

செயலாளர்

ஞானசம்பந்தம் காரியாலயம்,
தருமையாதீனம்
தருமபுரம், மாயூரம் P. O.
தஞ்சை மாவட்டம்.